12/18/2023



# அழியாத கோலங்கள்
















பொங்கும் இறை அன்பினால் பூத்த இதயங்கள்
தம்மை இயேசுவிந்கு அர்ப்பணித்த புனிதர்கள்
கல்விக் கண் திறந்த வண்ண மலர்கள்
வாழ்வை ஆகுதியாக்கிய தேவர்கள்
வாழிய! வாழியவே.



QUIS UT DEUS

PAX RAVICHANDRA

தம்மைத் தீப, தூப, மலரஞ்சலியாக்கி
அன்புச் சேவையால் ஞான வேள்வி யாத்து
கல்விக் கண் திறந்து வாழும் கலையை
வாழ்வால் வாழ்ந்து காட்டிய மாபுருஷர்கள்

உடல், பொருள் ஆவியனைத்தும்
எமக்களித்த தேவர்கள்-அறம்
பொருள், இன்பம் கண்டு, வீடு அடைய
வழிகாட்டிய ஞான தீபங்கள்

இறை அன்பினால் இன்புற்று
ஆணவம் கழித்த ஞானியர்-வாழும்
இயேசுவிற்கு வாழ்வால் சாட்சியம் பகிர்ந்த
உன்னத புருஷர்கள்

பங்கய முகத்தில் முத்துப் புன்னகை
பரிவும் கருணையுமான ஞான மொழிகள்
எம் சித்தமன்று, நின் சித்தமென்ற பரிபூரணசரணாகதி
அன்பும், உண்மையான இறைவனோ கருணாநிதி

வாழ்வும் போதனையும் ஒன்றான மனிதர்
மதம் கடந்த சமாரித்தர், தொலைந்த ஆடுகளைத்
தேடும் நல்லாயர், வழியும், உண்மையும், வாழ்வும்
“நானே” என்ற குருவின் பக்தர்

# புனித மிக்கேல் கல்லூரி-St.Michael 's College-Batticaloa








## "A College Second to None"




கல்லெடுத்து, மன்னன் கரிகால் வளவன்
கட்டியதோ கல்லணை-முத்தமிழ்
சொல்லெடுத்து கவிச்சக்கரவர்த்தி கம்பன்
சுவையுறு கவியமாய் பாடியதோ ஸ்ரீராம கதை

கல்லைக் குடைந்து காலத்தால் அழியாத மாமல்லபுரத்தை
படைத்ததோ-பல்லவ மாமன்னன் நரசிம்மன் கதை--பெரும்
கல் எடுத்து சோழ மாமன்னன் இராஜராஜன்
கட்டியதோ தஞ்சைப் பெருங்கோயிலின் கதை




மன்னனுமல்ல, மா கவிஞனுமல்ல,
கருணை வள்ளல் இவன்-வாழ்வை
இறைவனுக்கே தவமாக்கிய மாமுனிவன்

மானுடம் உய்ய, மாணவர் வாழ்வு சிறக்க
ஆமை வடிவான அழகிய புளியன் தீவில்
அருட் தந்தை பேர்டினான்ட் பொனல் கட்டியதோ
கல்விக் கண் திறக்கும் திருக்கோயில்

நூற்றாண்டு சென்றும் காலத்தால் அழியாத
புனித மிக்கேல் கல்லூரியோ-மாணவரின் எதிர்கால
எழுச்சிமிகு வாழ்விற்குப் புதுவாயில்

பல்லாயிரம் மைல் கடல் கடந்து, படகால் ஆறு கடந்து
சொல்லொண்ணாத் தியாகங்கள் புரிந்து
பத்தொன்பதாம் நூற்றாண்டில் கட்டிய கல்லூரி

கல்விக் கதிர் வீசும் கலங்கரை விளக்கம்
இனம், மத, மொழி, நிற பேதம் கடந்து
"**இறைவனுக்கு நிகரேது**" (Quis Ut Deus)
என்ற விருது வாக்கியம் ஓம்பிடும்
அருட் தந்தையின் இறை வணக்கம்



பிரித்தானியா , பிரான்ஸ் அரசுகள் வியக்க பெருநிதி கொண்டு
கட்டிய மாளிகை- ஏழையரும் கல்வியைப் சங்கநிதியாய்ப் பெற்று மகிழ
வள்ளல்களை மிஞ்சிய அருட் தந்தை பொனலோ-பெருவள்ளல்
"பொன் விதியை" வாழ்வால் இயம்பிய அருள் நிதியோ
அன்பு இறைவன் எமக்கருளிய பெருநிதி



அள்ள, அள்ளக் குறையாத கல்விச் செல்வம்
அனைத்து மாணவருக்கும் உரித்தாக
நிமிர்ந்து பார்த்து நெஞ்சம் இறைவனைப் போற்ற
வியப்புறு கட்டிடக்கலையோ விஸ்வகர்மாவையும் ஈர்க்க
விண்ணுயரக் கட்டிய அறிவாலயம்

1868 ஆம் ஆண்டில்-யாழ் ஆயர் *Mgr Christoper Bonjean*
அன்புக் கட்டளைக்கமைய-தமிழ்
அருட் தந்தை பிரான்சிஸ் சேவியர் பிலிப்
ஐந்நூறு ரூபாயுடன்-மீன்பாடும் தேன்நாட்டில்
தோற்றுவித்த பாடசாலைகளோ மூன்று

ஆங்கிலம் கல்வி மொழியாக ***புனித மிக்கேல் கல்லூரி,***
***புனித சிசிலியா பெண்கள் பாடசாலை,***
தாய்த் தமிழ் கல்வி மொழியாக ***புனித மரியாள் பாடசாலை***

ஆலயம், கல்லூரிகள் அமைக்க பாஸ்கல் முதலியார்
வழங்கிய நிலங்கள் இன்றும் வள்ளல் புகழ் பாடும்
கல்லூரிகளும், மாதா கோயிலும் அருட் தந்தையர்களின்
அர்ப்பண வாழ்விற்கு வானுயர ஆனந்த சாட்சியம் பகிரும்

"எல்லாப் புகழும் இறைவனுக்கே" என்று தம் வாழ்வை,
தீப, தூப, மலரஞ்சலியாய் இறைவனுக்கு அர்ப்பணித்த பெருமான்கள்.
இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழ தம் வாழ்வால்
அன்பு இறைவனை ஏற்றிப் போற்றிய புனிதர்கள்

1873 இல் ஐம்பத்தியேழு மாணவர்களுடனும், மூன்று
ஆசிரியர்களுடனும், திரு ஜோசப் ஆபிரகாம் அதிபராக
ஆரம்பமான புனித மிக்கேல் கல்லூரி.



ஐயன்.ஆபிரகாம் தலைமை ஆசிரியராக
1925 வரை திருப்பணி புரிந்து ஓய்வு பெற
“Bene Merenti”
விருது வழங்கி கௌரவித்த -புனித பாப்பரசர்

உகந்த கட்டிடமில்லாக் கல்லூரியை
ஆளுநர் Sir. Hendry MacCallum
“ The building which was dubbed a shanty”
என்று விமரிசிக்க, வசை கேட்டு வாடிய செவிகளுக்கு-
வாழ்த்தொலியாய், இன்னிசையாய் அற்புதச் சரித்திரமானது
அருட் தந்தை பொனாலின் மகத்தான சாதனை


Old St. Michael's – 1874 – 1915.


Mr. Joseph Abraham
Head Master 1876 – 1924

இறை பக்தியில் பேரின்பமுற்ற பெற்றோர் ஈன்ற தம் குழந்தைகள்
ஐந்தை, இறைவனுக்கே அர்ப்பணித்து பேருவகை கொள்ள
அண்ணன் தம்பியராய்த்-தம்மை
இயேசு சபைக்கு அர்ப்பணித்த பெருமான்கள்

இலங்கை வந்து -மீன் பாடும் தேனாட்டில்
இறை பணியாற்றிய மகான்கள்
மூத்தவர்-அருட் தந்தை சார்ள்ஸ் இளையவரோ
பேர்டின்ட் பொனல்

1895 இல்-பிரான்ஸ் நாட்டு இயேசு சபையினரால் திருமலை மேற்றிராசனம்
ஆயர் *Mgr Charles Lavigne SJ* தலைமையில் உருவாக
ஆயரின் கனவோ அமைக்கும் கல்லூரி
**“எதற்கும் சளைத்ததல்ல, இரண்டாவதும் இல்லை”**
என்றும் முதன்மையானதே உறுதி மொழியானது

பெருங்கனவான நாற்பத்திரண்டு குடும்பங்களின்
நிலங்களைப் பெற்று கல்லூரி கட்டுதல் நனவானது



அருட் தந்தை பொனலின் அழைப்பை ஏற்று
ஆளுநர் Sir. Hendry McCallum-16.7.1912 அன்று
அடிக்கல் நாட்டிடத் தொடங்கிய கட்டிடப் பணிகள்

ஆளுநர்கள்.Sir. Hendry MaCallum, and Clifford , உடன்
அன்றைய அரசாங்க அதிபரும், கட்டிடப் பணிக்கு அளப்பெரிய
ஆதரவு வழங்கி ஊக்குவித்த பெருந்தகைகள்

கட்டிடக்கலை நிபுணர் அருட் தந்தை போனல்,
அருட் தந்தை Alfred Royer உடன் இணைந்து கல்லூரியை வடிவமைக்க
அருட் சகோதரர் Wright பிரதான பொறியிலாளராய்
வரைபடத்திற்கு உருக்கொடுக்க-ஓவியமான கல்லூரி

ஊன் மறந்து, உறக்கம் துறந்த கடின உழைப்பால்
கல்லூரி, மண்ணில் முளைத்தெழுந்து பூத்துக் குலுங்க
நனவான மாமனிதர்களின் கனவு, ஓவியமோ காவியமாக
விண்ணவன் மனதிலோ தீராத மகிழ்வு

அருட் தந்தை போனலின் அளப்பெரிய உழைப்பிற்கு
அயராத துணை நின்ற அருட் தந்தையர்
D' Arras, Queste and Gouth

பிரான்ஸ் நாட்டில் பிச்சையேற்றும், பிரிட்டிஷ் அரசின்
மானியத்தோடும் (Annual grant) கட்டிடும் ஞான சாலை வளர்ந்திட,
கல்விப் பணிப்பாளர் Mr. Harward-1915 இல் பெருநிதியாய்
அரசு சார்பில் வழங்கிய 5000.00 ரூபாய்

இயேசு சபைத் துறவிகளின்-தன்னலமற்ற சேவையில்,
பெருமதிப்பும், புனித மிக்கேல் கல்லூரியின் அபிவிருத்தியில்
அக்கறையும், ஆர்வமும் கொண்ட Mr. E.B. Denham-

முன்னாள் கல்விப் பணிப்பாளர், தேசம் மாறிப்போனாலும்-
நேசம் மாறாது ஆபிரிக்காவிலிருந்து தொடர்ந்தும்
செல்வத்தை வாரி வழங்கிய வள்ளல்

கடும் நிதி நெருக்கடியின் மத்தியில், தளராத ஊக்கத்தோடும்,
தருவார் இறைவன் என்ற நம்பிக்கையோடும், தம்மை ஒறுத்துத்
தந்தையர் கட்டிய அறிவாலயம், மாணவருக்கான சரணாலயம்
மட்டக்களப்பின் மாண்பான வரலாறு
(St.Michael's College, the Pride of Batticaloa)




இருளில் வாழ்ந்த மக்களுக்கு
ஞான ஒளி கிடைக்கத் தம்மை ஆகுதியாக்கி
இயேசு சபை துறவியர் யாத்த ஞானயக்ஞும் இது

இது கல்லும். மண்ணும், சாந்தும், இரும்பும்,
மரமும் கொண்டு கட்டிய " **வெறும் கட்டிடமல்ல**"-
**மாமனிதர்கள் கனவில் பூத்த மகத்தான இலட்சியம்**




மாணவர் கல்விக் கண் திறக்க, ஊன், உறக்கம் துறந்து
இரத்த வியர்வை சிந்தி, இயேசுவைப் பின் தொடர்ந்து கல்வாரி
வழி நடந்த, கடின உழைப்பிற்கு கிடைத்த பெரும் பரிசு

இறை அன்பும், மானுட சேவையும் இரு கண்களாக
ஆகுதியாய்த் தம்மை அளித்தே- கர்ம யோகிகள் யாத்த
ஞான வேள்வியில் பிறந்த திருக்கோயில்

கல்வியால் வாழ்வு உயரக், கற்றதை வாழ்வாக்கிச் சமூகம் உயர
உண்மைக்கு சான்று பகிர்ந்து உலகு உயர-ஒரே குடும்பமாய்
இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழக் கட்டிய ஞானபீடம்

ஞான தீபமிது- அணையும் சுடரல்ல
கல்வியின் கலங்கரை விளக்கமிது- கல்லறையல்ல
கல்லணையல்ல- கல்விக் கங்கையின் கங்கோத்ரம்

இரும்பும், கல்லும், மண்ணும், மரமும்,
நீரும், சாந்தும் தந்தையை கண்டு மகிழ்ந்திடும்
தந்தையின் வியர்வைத் துளிகள் சேர்ந்திட
இன்புற்றே இணைந்து எ∴குவாய் மாறிடும்




மண்ணுக்குள் மறைந்த அத்திவாரமும், விண்ணோக்கி உயர்ந்த கோபுரங்களும்-
கல்வியால் மாணவர் உயர்ந்து விண்ணைத் தொட வேண்டும், அண்ணலின்
கலையாத கனவைச் சொல்ல, என் கனவை நனவாக்க வாருங்கள்
மாணவர்களே!. அருட் தந்தை விடுக்கும் அழைப்பாகும்



சிலையாய் வாயிலில் நின்றாலும் சிந்தையில் தியாகம் நிறைய
இன்றும், மாணவ நெஞ்சங்களைத் தொட்டுத்தழுவிட தென்றலாய்
உலாவிடும் தந்தையின் ஆவி, “அன்பு இறைவனுக்கு நிகரேது”
இறை துதி பாடும் தியாகி, வாழ்வைத் தவமாக்கிய கர்மயோகி

ஆசிரியர் பற்றாக் குறை தீர-அழைத்து வந்த, பிரெஞ்
அருட் சகோதரர்கள் Marist Brothers
முற்ற வெளிக்கு அருகில் அமைத்த ஆச்சிரமம் “Maris Stella”.



Tudor Batteries மூலம் இயங்கும்
மின்சாரப் பிறப்பாக்கியை கல்லூரியில் நிறுவி
அருட் தந்தை பொனல் ஆற்றிய புரட்சி

திரு. சவரிராஜா மாஸ்டர் சாரணர் இயக்கத்தை வளர்த்துப் புரிந்த
மாணவர் எழுச்சி, 1912 Junior Cambridge examination
பரீட்சை எழுதிய மாணவர் பெற்றதோ நூறு சத வீத வெற்றி

ஆய்வுகூட உபகரணங்களை அருட் தந்தை வரைபடமாக்கிட
-உதவியாளர் Oswin Sellar அவற்றிற்கு உருக்கொடுக்க
1915 இல் அமைக்கப்பட்ட McCallum Hall ஆய்வு கூடமோ-
இலங்கையின் தலை சிறந்த கல்லூரி ஆய்வுகூடமானது.




அருட் தந்தையோ, அற்புத விஞ்ஞான ஆசிரியராக
விஞ்ஞானம், மெய்ஞானம் கற்பித்து-மாணவர்
வாழ்வில் உயர்ந்திட- நின்ற இடத்தில்
ஏணியாய் தம்மை நிறுத்திய யோகி

பல கல்விமான்களை உருவாக்கிய கல்லூரி, மயில்வாகனன் கற்றதும்,
ஆசிரியராய் கல்வி கற்பித்ததும் புனித மிக்கேல் கல்லூரியில்,
பின்னாளில் வித்தகன் விபுலானந்தனாய் புகழ் பெற்றது,
கல்லூரிக்கும், பிறந்த மண்ணிற்கும் பொன்னாரமானது




பெருமை எல்லாம் மாமனிதர் பொனலையே சார, பெருமானோ
புகழ் கடந்த கர்மயோகியாய், இறைவனுக்கே தம்மை அடிமையாக்கி
மாணவருக்காய் வாழ்ந்ததும், மடிந்ததும் இங்கே
மாணவ மணிகளுக்கு உத்வேகமளிக்க-சிலையாய் மாறி
கல்லூரி வாயிலில் வரவேற்பதும் இங்கே

நிமிர்ந்த நடையும், நேர் கொண்ட பார்வையும், நீண்ட வெண்தாடியும்,
அருள் பொழியும் முகமும், ஆழ்ந்த அமைதியும், இளைஞர்களைக் கவர,
அன்போ பெருநிதி, கல்வியோ அழியாத செல்வம் -கற்று ஒழுகிட
வாருங்கள் மாணவரே!. அன்புக்கரம் நீட்டி அழைத்த ஞானச்சித்தன்

எஃகு விழிப்பார்வையில் ஞானம் ஒளி வீச
நீண்ட மொழி பேசாத அமைதி அவர் நீதியாக-பெருமானார்
கல்லூரி விறாந்தையில் நடந்து வர எங்கும் நிலவும் அமைதி
மாணவர் செலுத்தும் வணக்கமான பெருநிதி



கல்வியும், ஒழுக்கமும் ஓம்பிட-மாதத்தின் கடைசி வெள்ளியன்று-
சிறந்த மாணவர்க்கு சிறப்பு பரிசுகள் உரித்தாகும் , ஆசிரிய, மாணவர் குழாம்
கல்லூரி மண்டபத்தில் கூடி அளவளாவிடப் பிறந்திடும் சிறு சப்தமும்
அருட் தந்தையின் வருகையால் ஓய்ந்து அமைதி நிலவிட, ஆளுமை மிக்க
மாமனிதரின் அழகிய பிரசன்னம் ஓர் அற்புத சத்சங்கமாகும்

குருவே தெய்வம் எனும் சீடனின் உயர் பக்தி-
குரு பிரசன்னமே சத் சங்கமாக
மாணவ மனங்கள் ருசிக்கும் ஆனந்த சித்தி

மாணவர்களை கவர்ந்து உள்ளங்களில் ஆழப்பதியும் வண்ணம்
கற்பித்தலில்ஈடு இணையற்ற பெருவித்தகன்-நித்தம்
கல்விக் கடலில் நீராடும் புதுமைப்பித்தன்






மாணவர் கவனம் சிதறும்போது-இரு கரங்களினாலும் -கரும்பலகையில்,
இருவேறு கணக்கை-ஒரே நேரத்தில் எழுதி, வியந்து மாணவ
வழிகள் நிலைக்குத்திட மாயங்கள் புரிந்த மேதாவி -வியந்து
விபரிகின்றார் அருட் தந்தை John W. Lang, S.J -
Palm Fringed Coast என்னும் தன் நூலில்
(History of Trincomalee Batticaloa Diocese-from 1895-1967)

மாணவர் குழு சூழ்ந்திட-விழிகளோ வியந்திட, Sextant-வழியே-
மட்டக்களப்பின், நெடுங்கோடு, அகலக்கோட்டினை காட்டிய திறன்
கற்பித்தலில் மாணவர்களைக் கவர்ந்த சுந்தரன்
ஒழுக்கத்தை வாழ்வால் ஓம்பிய தவசீலன்

கடமையைக் கடிகாரம் போல் நேரம் தவறாது புரிந்த கர்மவீரன்
காலம் பொன்னானது என்றே பணி வாழ்வைத் தவமாக்கி
விழிப்போடு வாழ்ந்த ஞானச்சித்தன், கட்டாக்காலி மாடுகளோ,
நாய்களோ, கல்லூரி வளவிற்குள் நடமாட அனுமதிக்காத கூத்தன்




அருளுரை நிகழ்த்திடக் குருவானவர் இல்லாதபோது அவரே அருளுரை
நிகழ்த்துவார், மாலை ஆராதனைக்கு கல்குடாவிலோ,
கல்முனையிலோ, குருவானவர் இல்லை என்ற சேதி வந்த போது
துவிச்சக்கர வண்டியில் சென்று ஆராதனை நடத்தி- அங்கே உறங்கி
அதிகாலையில் கல்லூரி திரும்புவார்

துவிச்சக்கர வண்டியில் மூதூர் வழியாய் திருகோணமலை சென்று-
பின்அநுராதபுரம் சென்று, புகையிரதம் மூலம் கொழும்பு சென்று
இந்தியாவுக்குப் பயணமானவர்,அதே பாதையில் துவிச்சக்கர வண்டியில்-
ஊர் திரும்பிய வரலாறு அதிசயத்திலும் அதிசயம்

எளிமையின வடிவம், என்றும் இறையடிமை
நான் என்ற மாறாத இனிய தவம்

ஒவ்வொரு மாணவனையும் தன் பிள்ளையென அன்பு செய்த அருட் தந்தை
இரசாயனவியல், தாவரவியல், தூய கணிதம், பௌதிகவியல், புவியியல்
பாடங்களில் புலமைமிக்க அறிஞன், கேம்பிரிட்ஜ் முதுநிலை மாணவர்
வினாத்தாள்களை ஆய்ந்தறிந்து, விடைகளைத் தொகுத்து கற்பித்த தேவகுரு

புவியியல் பிடித்த பாடமாக, நவீன ஆய்வுகூடமோ, அயராத உழைப்பின்
பரிசாக-நடமாடும் கலைக்களஞ்சியம், மாணவர் அறிவும் ஆர்வமும் வளர
காந்தமாய் மாணவரை கவரும் கருணை மனம்
கல்வியை வேள்வியாக்கிய ஞான குணம்

கல்வி கடந்த போதனையில் மாணவ உள்ளங்கள் விழிப்புணர்வில்
நிலைத்து -தம்மைத் தாமே கண்டு கொள்ள, கல்லை வைரங்களாக
மாற்றிய சித்தன்,  ஒவ்வொரு மாணவனின் தனித்துவத்தை
மதித்து போற்றிய மனிதநேயப் பித்தன்
தனித்துவமே மாணவனின் தனிச் செல்வம் என
பறைசாற்றிய வெள்ளைக் கூத்தன்


Fr. B. Harry Miller S. J.
Rector 1959 - 1969
Principal 1959 - 1960




ஒரு தலைமுறையிலிருந்து-மறு தலைமுறைக்கு “ஞான தீபத்தை”
எடுத்துச் செல்பவனே உண்மைத் துறவி, மற்றெல்லோரும்
காவி தரித்த போலிகளே, லாமா லொப்ஸ்ட்ரம் லம்பாவின்
பொன் மொழிக்கு இலக்கணமான நல்லாயன்

இளைய தலைமுறை சுடர் வீசி ஒளிர்ந்திட
ஏந்திய ஜோதி தலைமுறை தலைமுறையாய்
தொடர்ந்து ஒளி வீசிட-தன்னை எரித்த ஞான தீபம்

***“உலகின் ஒளி நீங்கள், உலகின் உப்பு நீங்கள்”***
விழிப்புணர்வைத் தூண்டிய இன்னோர் இயேசு கிறிஸ்து

எளிமையின் வடிவம், கருணையின் உருவம்
உறங்கியதோ ஒரு மரப்பலகை
ஒன்று அல்லது இரண்டு செங்கற்களோ
உத்தமனார் தலையணை

கல்லில் தலை வைத்துப்-பலகையில் உடல் வைத்து உறங்கிடும் உத்தமனார்
உள்ளத்திலோ, ஆடிடத் தொட்டிலின்றி , அடங்கிடக் கல்லறையின்றி
தொழுவத்தில் பிறந்து நாடோடியாய் அலைந்து நற்செய்தி சொல்லி
மானுடம் வாழ-முள்ளில் மகுடம் சூடி , மூன்றாணிகளால்
சிலுவையில் தொங்கி, இரவல் கல்லறை கொண்ட இறைமகனின் நேசம்
உண்மையும், கருணையும் உத்தமனார் சுவாசம்

சொல், செயல், சிந்தனை எல்லாம் மாணவர் உயர்வுக்கே அர்ப்பணமாகிட
வழியும், உண்மையும் , வாழ்வையும் வேள்வியாய் யாத்த முனி-
ஆகுதியாய்த் தன்னை அர்ப்பணமாக்கிய மகரிஷி, மதுகாரிகள்போல்
மாணவர் சூழ மணம் வீசித் தேன் ஈந்த செங்கமலன்





புல்லுக்கும், முள்ளிற்கும் பூவைக் கொடுத்துப் பூரித்து
தந்தையின் உள்ளத்தில் நாளும் கருணையாய்ப் பூத்த இறைவன்
கற்க கசடறக் கற்றவை கற்றபின், நிற்க அதற்குத் தக-குறளக்கேற்ப
மாணவர் வாழ்வு ஓம்பிட உழைத்து இன்புற்ற இறைமகன்

ஒவ்வொரு நிமிடத்தையும் பொன்னாய்க் காத்து
மண்ணுக்காய் உழைத்த மாமனிதன்
ஒவ்வொரு துளி வியர்வையும்-மாணவ மனம் செழிக்க
மாரி மழைாய் பொழிந்த புனிதன்



பெண்களுக்கு கல்லூரியில் இடமில்லை, கடுந்துறவில்
கற்பில் நிலைத்த மாமுனி, காலவெளியில் கல்லூரியில் உலாவிய
நடமாடும் பல்கலைக் கழகமோ மெய்ஞானி

புனித மிக்கேல் கல்லூரி அமைத்தலே அன்னாரின் வாழ்வானது
ஆயர் Lavinge and Fr. Robichez கண்ட கனவு
அருட் தந்தையால் நனவானது

முதலாம் உலக மகா யுத்தம் நடந்தபோது கல்லூரியின் அத்திவாரம்,
மூன்றடுக்குகளைத் தாங்கவல்லது என்பதோ , அன்னாரின்
அளப்பெரிய ஆற்றலுக்கும் செயற்திறனுக்கும் எடுத்துக்காட்டானது

மெதடிஸ்ட் மத்திய கல்லூரி பரிசளிப்பு விழாவில்
அன்னாரோ சிறப்பு அதிதி- ஆற்றிய உரையில்
***நாம் கல்லூரிச் சகோதரிகள்–எமது*** மூத்த அக்கா நீங்கள்-
உங்கள் சிறிய தங்கை நாங்கள் என Weslyan
சகோதரருடன் நட்புறவு பாராட்டிய பெருந்தகை




பல்லாண்டு காலக் கல்லூரி நிர்வாகி, கல்லூரி விதிகளும்,
ஒழுங்கு முறைகளும் பசுமரத்தாணியாய் நெஞ்சில் நிலைக்க-
பத்தொன்பது ஆண்டுகள் மறை பரப்பு இயேசு சபையின்
Superor Regular அர்ப்பணிப்பே அன்னாரின் எதிர்பார்ப்பு

எப்போதும் தக்க பதிலும், செய்ற திறனும் , ஐயன் எதிர்நோக்கு
***பசும் பொன்னாய், வைரமாய் அவர் தரம்,*** நிகரற்ற தலைமைத்துவம்-
இறை வரம், கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டின் உருவம்
பண்பாளனாய்ச் சிறு விதியையும் மீறாத உயர் ரகம்




எழுபத்தி ஐந்து வயதிலும் ஓய்வு வேண்டாத தொழிலாளி
ஆலயத்திலும், பாவசங்கீர்தன கூட்டிலும் அயராது பணியாற்றி
சிறுபணியையும் பணிவோடு மகிழ்ந்தே புரிந்து-சாந்தமும்
தாழ்ச்சியும்நிறைந்த பணிவாழ்வில் தன்னை தேய்த்து மணந்த சந்தனம்.
இருள் நீங்கிடத் தன்னை எரித்த தியாக தீபம்

கணக்கெடுப்பில் வல்ல புலி, 1895 முதல் 1937 வரையிலான
கணக்கெடுப்பில் , 3900 இருந்து 14,745ஆக உயர்ந்த கத்தோலிக்கரின்
எண்ணிக்கையை-பிறர் போற்ற, 42 வருட உழைப்பில் -அறுவடையோ
சிறிது என்று தாழ்ச்சி கொண்ட பெருமான்



வைகாசி 7.1945 ,புனித மிக்கேல் தூதர் காட்சி கொடுத்த
திருநாளுக்கு முந்திய இரவு, நாட்ஸி ஜேர்மனி சரணடைந்த நிகழ்வு
நேரமோ இரவு 10:45

சுந்தரனைக் கடும் சுரம் வாட்ட, உடல் வெப்பநிலை 108° F ஐ எட்ட
சந்திரனும் தேய்ந்தே வருந்த-கர்த்தரின் திருமந்திரத்தை மனம் ஓதி இன்புற-
வானவரும் மகிழ்ந்திட, வா மகனே என்று வாரியணைத்த இறைவன்
இறைவனுக்கு நிகரேது என்றே-தந்த மூச்சை தந்தையிடம் ஒப்படைத்த ,
அருட் தந்தை பொனலோ யோகி

## College Anthem

Sons of Blessed St. Michael,
uplift our flag on high!
Our shouts of joy and praise pour
forth and rend the sky,
Let College walls re- echo on this
our Patron's Day
Successes attend the Teachers
and College dear we pray.

Comrades, brothers in the battle
Of an arduous strife and long,
Join we heart and hand, while here
we
Land our college life in song.

Till the day our Alma Mater
Crowns each victor in the fight
Then to wear our laurels proudly
And May God defend the right!

*A.R.P.Leetham M.A. (OXON)*

கற்பூர ஆரத்தியை இதயம் எடுக்க
கண்ணீர் அஞ்சலியை விழிகள் தொடுக்க
அருட் செல்வர்-அருகே அழுது நின்ற
அருட் தந்தை Hamilton

மறு நாள் இரண்டாம் உலகப் போர் வெற்றியை
முற்றவெளி மைதானத்தில் மக்கள் கொண்டாட
ஆரவாரமின்றி ஆலையடிச் சோலையில்
தனியாய் ஓய்வெடுக்கப்போன புனிதன்

தியாக தீபம், அறிவுத்திறன், தார்மீகப் பண்பு
ஒன்றிணைந்த கருணையின் திருவுருவம்
தன்னடக்கத்தின் பெருவடிவம்-தன்னலம் கருதாத மகான்

நடந்து செல்லக் காண்பதோ பெரு வரம்-
"***இவர் போல் இன்னோர் மனிதர் இனியும் வரக்கூடுமோ?*** "
எண்ணிட ஏங்கும் மாணவ மனம்

நிறை குடமாய் வாழ்ந்த பெருமானுக்கு இறப்பென்பதில்லை
என்றும் நிலை வாழ்வே எண்ணிட இறை துதி பாடும் இதயம்
ஈடு செய்ய இயலாத அவர் பிரிவை நினைந்திட
இரு விழிகளிலோ கங்கையின் பிரவாகம்

அன்னாரின் அளப்பெரிய சேவையைப் பாராட்டி
நினைவு முத்திரை வெளியிட்டு-அருளாளனுக்கு
புகழாரம் சூட்டியது இலங்கை அரசு

புனித மிக்கேல் கல்லூரி-கட்டிடமல்ல -அருட் தந்தையின் வாழிடம்
கல்லூரியல்ல இது-கலை மகனின் ஆலயம்
யாவருக்கும் கல்வியை வாரி வழங்கிய ***மாணவ சரணாலயம்***






ஆடி 27 1945, மூன்று மாதங்கள் கழிந்திட-மூத்தவர்
அருட் தந்தை பொனலின் சகோதர, அருட் தந்தை சார்ல்ஸ் பொனல்
சாய்வு நாற்காலியில் அமர்ந்தவாறே விண்ணகம் போன துயரம்

எப்போதும் இறை சித்தமே என் சித்தம் என
“Fiat voluntas tua” வாழ்ந்த அண்ணல்
கேரளாவில்  Changanacherry எனுமிடத்தில்
St.John Berchmans College
தோற்றுவிக்க பெரும் பங்கு வகித்த வள்ளல்
பெரும் ஓவியக் கலைஞன்



சிரித்த முகம், தன்னம்பிக்கையின் வடிவம் வாழ்வை இரசித்து ருசித்து
நகைச்சுவையோடு வாழ்ந்தவரோ அருள் வடிவம், மரிக்கும் நாள்
அன்று மாலை 4.00 மணிக்கு, நீலவானைச் சுட்டிக்காட்டி
அங்குதான் போகிறேன் எனத்-தம்
அருகில் நின்ற சகோதரரிடம் கூறிய தந்தை


“The Nari Swami” - Fr. Henry Bury S. J.

“Ever Better”
திருமலை புனித ஜோசப் கல்லூரியின் விருதுவாக்காக
“ The merry boys of St.Joseph’s” பாடலை இயற்றி
தினமும் காலையில் பாடங்கள் ஆரம்பிக்குமுன் பாடப் பணித்தவர்
என்கிறார் அன்னாருக்கு புகழாரம் சூட்டும்
அருட் தந்தை Reichard

வாழ்ந்ததும் இம் மண்ணுக்காய் -மடிந்து உடலை உரமாக்கியதும்
இம்மண்ணுக்காய் வள்ளல்களாய் வாழ்ந்த அன்னனும். தம்பியும்
ஆலையடிச்சோலையில் அருகருகே உறங்கிட, களையிழந்த
கல்லூரி வளாகத்தே கூவிக் கரையும் ஒற்றைக் குயில் -சூடிய பூக்களை
கலைந்து சோகத்தில் நிலைத்த இளஞ்சிவப்பு எக்காள மரங்கள்

1937 முதல் 1955 வரை கல்லூரி அதிபராகவும்,
Rector ஆகவும் பெரும் பணியாற்றிய மகான்
அருட் தந்தை Emmauel Growther

பதினேழு வருட அளப் பெரிய சேவையின் பின்னரும்
கத்தோலிக்ப் பாடசாலைகளின் பணிப்பாளராய்
சேவையைத் தொடந்த தன்னடக்கம் மிக்க அறிஞன்





*******************************

**1948–சுதந்திர இலங்கையில் தாய் மொழி கல்வியாக**
**ஆங்கிலம் இரண்டாம் மொழியாக கால மாந்நங்கள்**

காலி, புனித அலோசியஸ் கல்லூரியை
வானளவு உயர்த்திய மாமனிதர் ***அருட் தந்தை போல் பீரிஸ்***

இயேசு சபை-தலைவரின் பணிப்புரைக்கமைய, 1961 இல்
புனித மிக்கேல் கல்லூரியின் அதிபராக, கல்லூரி வரலாற்றில்
புதியதோர் மறுமலர்ச்சீ இன, மொழி கடந்த இன்னேர் கிறிஸ்து
வந்தேன், பார்த்தேன், வென்றேன் என்ற அவர் வாழ்வோ புரட்சி

அவர் பிரசன்னமே ஆசிரிய-மாணவர்களுக்கு அழகிய ஒழுக்கம்
-எங்கும் அமைதி நிலவிட, கல்லூரியை வளம் கொழிக்கும்
புனித பூமியாய் மாற்றிய ஞான உழவன்

சீரிய சிந்தனையாளன்-ஆங்கில அரிச்சுவடியை இரட்டை ரூள்
அப்பியாச கொப்பியில் எழுதப் பழக்கி. என் கையெழுத்தை மாற்றி ,
தம் கையெழுத்தோடு ஒப்பிட்டு , என்னைப் பாராட்டிய அருட் தந்தை-
இலட்சியமும், தொலை நோக்குமில்லாத இளைய தலைமுறைக்கு
“வெற்றிக்கு வழி கடின உழைப்பு ஒன்றே” அவர் தாராக மந்திரமாக
மாணவர்களை ஊக்கப்படுத்திய உழைப்பாளி




மாணவர் பிரச்சினைகளுக்கு செவிமடுத்த மேய்ப்பன்
ஆயனில்லா ஆடுகளை வழிநடத்திய நல்லாயன்
Pauline Thought is' like
'The law of work is the law of life'

பாடசாலை தொடங்கும் வேளையில்-மாணவர்களுக்கும்,
ஆசிரியர்களுக்கும்-அரிய பாடமாய்-அனுபவத்தால் பெற்ற
தேனாய் இனிக்கும் அன்னாரின் சிற்றுரை

அயராத உழைப்பால் மாணவர் வாழ்வை மேன்மையாக்கிய மாமேதை-
தாமதமாய் வருவதும், றுமனே பொழுதைக் கழிப்பதும் பழங்கதையாகிட
உழைப்பின் மேன்மை புரிந்து-தேனீக்களாய் உழைத்து
மாணவ, ஆசிரிய குழாம் உயர்ந்திட-உண்மையும், ஒழுக்கமும்,
கடின உழைப்பும் உயர்வுக்கு வழி , வாழ்ந்து காட்டிய நல்லாயன்

பட்டதாரி ஆசிரியர்களை நியமித்து
பல்கலைக் கழகம் செல்லும் மாணவர் எண்ணிக்கையை
பன்மடங்காய் உயர்த்திய புரட்சித் தலைவன்

கல்லூரிகள் பல இருக்க, உயர் கல்வி நாடி
மாணவ, மாணவிகள் தேன்மலர் நாடும் வண்டுகளாய்,
புனித மிக்கேல் கல்லூரியைத் தேர்ந்தெடுக்க, வானுயர்ந்த
சோலைபோல் அன்னாரின் அயராத உன்னத உழைப்பு



சீரிய சிந்தனையும், கடின உழைப்பையும்  மூலதனமாக்கி
தோல்வி எனும் தடைக்கல்லைப் படிக்கல்லாக்கி
உழைப்பே வெற்றிக்கு வழி என ஓம்பிய பெருமான்
ஒழுக்கமும். கல்வியும் ஓம்பிட-அன்னாரின்பெருமையைப்
பலரும் அறிந்து போற்றிட, எல்லாம் இறை செயல்
எனப் பணிவோடு இயம்பிய புனிதன்.



சிங்கள மாணவர்களும் ஒன்றாய்க் கல்வி பயில
தமிழ்- சிங்கள தேசிய ஒற்றுமை வளர
வித்திட்ட சிந்தனையாளன்




விருப்பு பாடமாக சிங்களம் மாறிட, மாறிடும் தேசிய கொள்கையில்-
தமிழனும், வெற்றி பெறக்-கற்கை நெறிக்குள், பௌத்தம்,
இந்து சமயத்தை உள்வாங்கி, இன ஒற்றுமைக்கு
கல்வியே வழி என இயம்பிய புரட்சியாளன்

புனித மிக்கேல் கல்லூரி கல்வி, ஒழுக்கம், விளையாட்டு என
பல்துறைகளிலும் போற்றப்பட பாடுபட்ட நல்லாயன்

தடைகள் பல தாண்டி- சாத்வீகத்தால்
எதிர்ப்புகளை போராடி வென்று
எல்லோரும் வாழக் கனவு கண்ட -புனிதன்



தடைப்படும் மாணவர் கல்வி. சுயதொழிலால் உயர்ந்திட
தொழில் நுட்பக் கல்வியை அறிமுகம் செய்து, காலத்திற்கு ஏற்ப
கல்வியும் மாறவேண்டும் என்ற மாமேதை



நிதிச் சுமையால் வாடி-இயேசு சபை செய்வதறியாது திண்டாட
அரசுடமையான மூன்று கல்லூரிகள், கால வெள்ளத்தில்
பிரிந்து போன வெள்ளை – கறுப்புப் புனிதர்கள்

கூடைப்பந்தாட்டம், கிரிக்கட், உதைப்பந்தாட்டம்
விளையாட்டுக்களால் கல்லூரியின் புகழ் ஓங்கிட-அயராது
உழைத்த பெருமான்களாய், அருட் தந்தையர் வெபர். ஹேர்பாட்

தலை சிறந்த நிதி, நிர்வாகத்தால் கல்லூரியை வழி நடத்திய
பெருமான் அருட் தந்தை ஹென்றி மிலர்







மீன் பாடும் தேனாட்டில் -மீன் உருவில் ஆலயம்
அமைத்த பெருவள்ளல் மேயர்

தொழில் நுட்பக்கல்லூரியை
பல்லாண்டு வழி நடத்திய புனிதர் லோரியோ

குறவருக்கும் புதுவாழ்வு கொடுத்த
அருளாளர் அருட் தந்தை Cook

அழகு தமிழில் உரையாடும்
அழகிய மகன் அருட் தந்தை A.I. del Marmol

சிறுவரின் தோழனாய்-புன்னகை மன்னனாய்
காண்போர் உள்ளங்களை
கொள்ளை கொண்ட அருட் தந்தை வெபர்

தமிழனுக்காய்- தமிழனாய் கொல்லப்பட்ட
வெள்ளைத் துறவி-ஹேபர்ட்

பழைய கல்லூரி மாணவர் சங்கத்தை 1909 இல்
ஆரம்பித்த அருட் தந்தை Arras -முதல்
தலைவராக அருட் தந்தை S.Lazarus

பெற்றோரையும், பிறந்த பொன்னாட்டையும் துறந்து
வாழ்வின் பெருநிதியான இளமையையும் , இறைவனுக்கே
அர்ப்பணித்த இயேசுவின் நற்சீடர்

கடல் கடந்து-இறை தொண்டாய் கல்லூரிகள்
அமைத்த பெருவள்ளல்
***அருட் தந்தை பொனல்-வண . வில்லியம் ஒல்ட்***

பல கோடி உயிர்களைப் பலியெடுத்த இரண்டாம் உலக மகா யுத்தம்
பல நூறு பிரெஞ் இயேசு சபைத் துறவியரரையும் பலியெடுக்க
தொண்டைத் தொடர அமெரிக்க New Orleans இயேசு சபையினரை நாடிக்
கல்லூரியைக் கையளித்த பிரெஞ் இயேசு சபையினர்

மீன் பாடும் தேன் நாட்டில் 1933 காலடி எடுத்த வைத்த
முதல் அமெரிக்க இயேசு சபைத் துறவி
*Rev.Fr.Lenchan*-அவரைத் தொடர்ந்த
அமெரிக்க இயேசு சபைத் துறவியரின் அரும் பணிகள்




யாவருக்குமாம் கல்விச் செல்வம், யாவருக்குமாம் அழியாத
ஞானச்செல்வம், யாவரும் கற்று மேதினியை ஆளலாம்
வாழ்விலே சூரிய சந்திரராய்ச் சுடர் வீசலாம்

ஏணிகளாய் நின்ற இடத்தில் நின்றே, வானில் எம்மை
ஏற்றி விட்டார், கற்பூர தீபங்களாய் தம்மை எரியவிட்டு
எம் இருள் போக்கி இன்புற்றார்

ஞானச் செல்வத்தை இன்புற்று அள்ளி வழங்கிய
வள்ளல்கள் எல்லோரும் நம் சகோதரர் என்றே
கல்வியை வேள்வியாக்கிய கர்மயோகிகள்



***மெதடிஸ்த மத்திய கல்லூரி- வின்சன்ட் மகளீர் கல்லூரி***
***அமைத்த பெருமானார் வில்லியம் ஒல்ட்.*** வந்த சில
மாதங்களுக்குள் இறந்தும் இறவாப் புகழோடு வாழும் புனிதர்

கல்லூரிகளும், பாடசாலைகளும் ஊர்கள் தோறும் தோன்றிடக்,
கல்வியில் காதல் கொண்ட மாணவர் கற்று வாழ்வில் உயர்ந்திடப்-
பெற்றோர் உற்ற இன்பம் கண்டு உறவாய் மகிழ்ந்தார்,
மானுடத்தை உறவாக்கி , உலகையே ஒளியூட்டிய உத்தம புத்திரர்

தொண்டு புரிந்த தெய்வங்களைத் தொழுது வாழ்த்தல்
நம் தலையாய கடன் அன்றோ? -யாத்ரீகனாய், விருந்தினராய்,
வந்து போகும் உலகில்- வந்தோம் வாழ்ந்தோம் என வாழாது
பிறரை வாழ வைப்போம் என்றே வாழ்வால் கற்றுத்தந்த-தெய்வங்கள்




எம் விடியலுக்காய் கானமிசைத்த கோகிலங்கள்
சங்க நிதியான கல்வியை அயராது வாரி வழங்கிட
கற்பக தருவாய், அட்சய பாத்திரமான தெய்வங்களை
நினைந்து தொழுதல் நம் அறமன்றோ?

மண், பொன், பெண் புகழ் தேடும் உலகில் இறை பணிக்காய்த்-
ஏழ்மை, கற்பு, கீழ்படிதலை  தவமாக்கிய  இறை தொண்டர்கள்-
இறுதி மூச்சு வரை-மானுடனுக்குத் தொண்டனாய்-
மானுடம் உய்ய வாழ்ந்த மாமனிதர்கள்



***எல்லாப் புகழும் இறைவனுக்கென்றே*** –பிறர் வாழத்
தம்மை ஆகுதியாக்கி
ஞான வேள்வி யாத்த தேவரிஷிகள்

இறந்தும் இறவாது மனங்களில் வாழும்
இறவாப் புகழ் பெற்ற மாமனிதர்கள்
வாழ்வையே தானமாய் ஈந்த வரலாற்று வள்ளல்கள்
இவர்கள்போல் யாருமுண்டோ?

வெள்ளை நிற மல்லிகையோ, வேறெந்த மாமலரோ
வள்ளல் அடியினைக்கு வாய்த்த மலரெதுவோ?
வெள்ளை நிறப்பூவுமல்ல, வேறெந்த மலருமல்ல
உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது
வெள்ளை மனம் படைத்த-உத்தமத் துறவிகளை கண்டோ
வித்தகர் விபுலானந்தன்-பாடினார் இக்கவிதை

ஒன்றே குலம் ஒருவனே தேவன்-யாதும் ஊரே யாவரும் கேளீர்
யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும், மூத்த குடி முழங்கிய
வாரத்தைக்கு, வாழ்வால் உயிர் கொடுத்த வெள்ளைத் தமிழன்
பிரெஞ், அமெரிக்க இயேசு சபைத் துறவிகள் வாழ்க வாழ்கவே

பிறந்த பொன்னாட்டை விட்டுப் பறந்த வெள்ளைப் பறவைகள்
பனிக்காலம் கழிக்க இடம் பெயர்ந்த புள்ளினங்கள் அல்ல இவை-
இறை பணிக்காய் எல்லாம் துறந்த தியாகிகள் -
மாணவர் வாழ்வில் ஒளியேற்றிய தியாக தீபங்கள்

மல்லிகையோ சுவாசத்தில் மணக்க, முல்லையோ நேசத்தில் கலக்க
முத்துநகையோ இதழ்களில் நிலைக்க கிளி மொழியாத் தமிழ் ஒலிக்க
அன்பே வடிவான இறை குழந்தைகள் -எல்லாம் இறைவனுக்கென்று
தம்மை வெறுமையாக்கிய கர்ம யோகிகள் வாழிய வாழியவே!

வள்ளல்கள் வாரி வழங்கிய செல்வங்களும்
வள்ளல்தம் வாழ்வோடு முடிந்திடும்
வானம் பொழிந்திடும் மழையும், பருவம் மாறிட நின்றிடும்-
பசு தரும் பாலும் கன்று வளர்ந்திட ஓய்ந்திடும்

மாறாது, மறையாது , ஓயாது ஒழியாது-பெருமானார் வழங்கிய கல்விச் செல்வம்-
இன்றும் தொடரக் கண்டு புனித மிக்கேல் கல்லூரி மாணவர் மனம்
பெருமிதத்தில் பொங்குது, நன்றியோடு போற்றுது

மாதா, பிதா, குரு தெய்வமாய் - என் வாழ்வில் கலந்த உறவுகளுக்கு ,
***பிள்ளை மனம் போற்றிப் பாடும் நன்றிப் பாடல் இது***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra -27-09-2023



# வெள்ளைக்குயில்–Rev.Fr.B.H. Miller SJ

---





பாலும், தேனும் ஓடிடப், பாடும் மீன்கள் வாழும் வாவி சூழ்
புளியன் தீவில் புள்ளிக்குயில்கள் பூபாளம் பாட
வண்ணமயில்கள் தோகை விரித்தாட-மணி குலுங்க
பச்சைப் புல்வெளிகளில் பசு நிரைகள் மேயும்

பார்க்குமிடமெல்லாம் பசுமை துலங்க, பார்த்தவர்
வியக்க, கம்பீரமாய் வானுயர எழுந்து நின்று
கல்விக்கோர் கலங்கரை விளக்கமாய்
புனித மிக்கேல் கல்லூரி ஒளிரும்

வெள்ளைத் துறவிகள் எழுப்பிய அறிவாலயம்
மனிதநேயம் ஒளிரப்-பல்லாண்டுகளுக்கு மேலாய்
கல்விக்கண் ஈயும் ஞான நேத்திரலாயம்

இன்றோர் இயேசு சபைத் துறவியின் சகாப்தம்-இங்கு
முடிந்து போனது, ஈழத் தமிழனுக்காய்ப் பண்ணிசைத்த
வெள்ளைக் கோகிலம் பண்ணை நிறுத்தி
பாடலை முடித்து வான் வீடு போனது.

உறங்காது உழைத்த மாமனிதன் உறங்கிடப் போனார்
வீரமறவர் வாழ்ந்து வீழ்ந்த தாயகத்தில்
அகிம்சா புத்திரனும் பூதவுடலை உரமாய் விதைத்து
அன்பு மனங்களில் நினைவாய் முளைத்து வானகம் போனார்.



கண்களில் நீர் பாய , காலத்தால் அழியாத
மாமனிதனை, இறை கொடையென்றே போற்றுகின்றேன்
எல்லாப் புகழும் இறைவனுக்கென்றே பாடுகிறேன்

இது குளிக்காலம் கழிக்க- இடம்பெயர்ந்த உல்லாசப்பறவை
அல்ல, வாழிடம் துறந்து-எம் வாழ்வு சிறக்க
இசைபாடிய இறைவனின் வெள்ளைக் கோகிலம்

எம் நெஞ்சில் தன் கனவுகளைத் தூவி-ஏறி நாம் உயர-
இருந்த இடத்தில் நின்ற தியாக ஏணி
வாழ்வை நமக்காய் ஈந்த ஞானி

வாழ்வால் பிறருக்கு வாழ்வீந்த வள்ளல்
அன்பு இதயங்களை ஆட்கொண்ட ஞானச்செம்மல்

புனித மிக்கேல் கல்லூாரியின் அதிபராய்-இயக்குனராய்
பல்லாண்டு அளப்பெரிய சேவை செய்த மாமனிதன்-
முப்பதாண்டு கால கோர யுத்தத்தில்-
ஈழத்தமிழனுக்காய் குரல் கொடுத்த வெள்ளைத்தமிழன்





இராணுவத்தின் கண்களுக்கு -ஈழ
விடுதலைக்காய் குரல் கொடுக்கும் வெள்ளைப் புலி
அமைதிக்காய் பாடுபட்ட வெள்ளைப்புறா
மனித உரிமையின் விடிவிற்காய் கூவிய செஞ்சேவல்

இளைஞனாய் வந்த உறவு, மாதா, பிதா குருவாய்
பூத்து மகிழ்ந்து மணம் வீசிய பௌர்ணமி நிலவு
அன்பு இதயங்களில் இன்றும் உலவும் நிலவு-இன்றோ
அமைதியில் உறங்கிடும் இன்பக்கனவு

அறிவின் மேல் தீராக் காதல் கொண்ட அற்புத உறவு
அறிவுக் களஞ்சியமாய் உலாவிய ஆனந்த இயேசுவின் துறவு-
அருட் தந்தை பெஞ்சமின் ஹென்றி மிலர்
வாழிய வாழிய வாழியவே




**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-27-09-2023*

# Rev.Fr.Harold J. Webber SJ

20.2.1914-14.4.1998

---

என் கண்களில் கங்கை வடிய
என் நெஞ்சில் சோகப் பூகம்பம் வெடிக்க-இன்று
என் இதயக்கோயிலில் ஓர் பேரிடி

என் பொன்வானத்து வெண்ணிலவு கண்மறைந்திட
என் பூ வனத்து புள்ளிக்குயில் மௌனமாகிட
புன்னகைப் பூச்சொரியும் அன்பின் நந்தவனம்
கனவாய், பழங்கதையாய் கலைந்து போனதுவே



இது தேகம் பூண்ட துறவல்ல
இறையன்பால் மலர்ந்த தியாக உறவு



தன்னை எரித்தே ஒளிர்ந்தது மெழுகுவர்த்தி
தன்னை அரைத்தே மணந்தது சந்தனக்குந்றி
இறை சித்தமே என் சித்தம் என தன்னை
அர்ப்பணித்ததோ தேவகுரு வெபரின் பக்தி

மனிதநேயத்தை, மாணவ இதயங்களுள் விதைத்த
மாமனிதனே, எம் அறியாமை இருளை அகற்றிட
ஒளிர்ந்த தியாகச் சுடரே-உம்மால் எம் பொழுதும்
புலர்ந்தது- எமக்கு புது நம்பிக்கையும் உதித்தது.

நாளும் நாம் உயர-ஏணியாய் நின்ற-தேவஞானி நீ
எம்மை கரைசேர்க்க படகோட்டியாய்
உன்னைத் தாழ்த்திய தேவகுருவும் நீ

புற்றுநோய் உன்னை வாட்டியபோதும்
தேசமெங்கும் யுத்த நெருப்பெரிந்தபோதும்
உன் தேசம் போக மறுத்து-இது என் தேசம் என்றாய்

குண்டுகளும் ஷெல்களும்-உன் கூரையில் விழுந்தபோது
என் கூரை பத்திரமா?, என விசனத்தோடு விசாரித்தாய்.

அப்பா உன்னைத் தொட்டதினால் மனிதநேயம்
எம்மை பற்றியது, உன் னைத் தொடர்ந்ததினால்
சேவை உணர்வும் எம்மில் பிறந்தது

நீ இல்லாத விழாவும் விளையாட்டு போட்டியும்-
இன்று, ஐயனே, நிலவில்லாத வானாய்
மலரில்லாத குளமாய் மாறிய அவலம்

ஐயா- உன் பிரிவினால் பாடும் மீன்களும்
முகாரி இசைத்திட, பாசிக்குடாவும் களை இழந்திட
கூவும் குயில்களும் -கேவிகரைகின்றன.

நீ இருக்கும் வரை தனிமை எனக்குத் தெரியவில்லை
உனை பிரிந்தபின் கூட்டமும்
என்னை வாட்டும் கொடுமையானது

உன் மூடிய விழிகளுக்குள், எங்கள் உதயம்
மூழ்கியதுமேனோ? உன் வாடிய உடலுக்குள்
எங்கள் வசந்தம் கருகியதுமேனோ?

கரைவந்து அலைமோதும் கடலும் உன் பிரிவை
எண்ணி அழுகின்றன, தடை தாண்டி  கூடையில்
விழும் பந்துகளும் உன் னைத் தேடித் தவிக்கின்றன.

அன்று உன் சிவந்த கைகளைக் குலுக்கி
கனத்த மனங்களும் காற்றாய் நெகிழ்ந்தன,
உன் கனிந்த புன்னகை தொற்றி
காய்ந்த முகங்களும்-மலராய்ப் பூத்தன-



இன்றோ உன் மூடிய விழிகளுக்குள்
எம் புன்னகையை ஒளிய வைத்தாய்
வாடிய எம் விழிகளுக்குள்
வற்றாத கங்கையைப் பிறக்கவைத்தாய்

ஆயிரம் மலர்களுள்-அழகிய பாரிஜாதம் நீ
ஆயிரம் நதிகளுள் -அற்புத தேவகங்கை நீ
போலி ராஜாக்கள் நடுவே-நீ ஒரு தியாகராஜா

எம்மை வாழவைக்கத் தாயகத்தை பிரிந்து-கானகத்தில்
கூடு கட்டிய வெள்ளைப்புறா -நீ
முள்ளால் மகுடம் சூட்டிடும் உலகில்- எமக்கு
வாசமலர்களால் கிரீடம் சூட்டிய பாசமலர் நீ

பாரச்சிலுவையை தோளில் சுமத்திடும் உலகில்
பாசத்தோடு என் சிலுவையைச்
சுமந்த இன்னோர்-தேவமைந்தன் நீ

உன் வாழ்வோ-இயேசுவிற்கு சாட்சி
உன் அன்போ நட்பிற்கு மாட்சி



உன் வித்துடலை விதைத்ததினால்
எங்கள் மண்ணும் இன்று புனிதமானது
உனக்காய் கண்ணீர் சிந்தியதனால்
எங்கள் இதயமும் தூய்மையானது

எமக்கென்று, உனக்குரியதெல்லாம் இழந்து-
உனக்கென்று எம் இதயத்தை மட்டும்
உனதாக்கி கொண்ட-அற்புதன் நீ

ஓ தியாக வித்தே! மீண்டும் நீ  முளைக்கவே
இன்று உன்னை எம் இதயங்களில் விதைத்தோம்
இரத்தத்தால் சிவந்த எம்மண் செழிக்கவே
உன் வித்துடலை இங்கு புதைத்தோம்

சோகத்தை என்னிதயம் சுவைக்க
சொர்க்கத்தில் இன் சுகந்தமாய் நீ மணக்க-
ஏன் பிரிந்தாய் எமைவிட்டு?

கொட்டும் விழிநீர் உன் பாதம் பட்டும்-நீ விழிக்கவில்லை,
என் இதயம் மீட்டும்  முகாரியை நீ கேட்டும்
உன் துயில் கலையவில்லை ஏனோ?

மண்ணில் உன் துயிலிடம் வண்ண மலர்களால் அழகுற
விண்ணில் உன் வாழிடம் -இறையன்பால் ஒளிபெற
என்னுள் உன் நினைவோ இனிக்கும் தேனாய் என்றும் இருக்கும்

உத்தமனே நித்தியத்தின் அர்ச்சகனே!
கத்தும் கடலேனும். கருவான் நிலவும் உள்ளவரை
-சத்தியமாய் என் உள்ளம் ஒருநாளும் உன் னை மறவாது

மனிதத்தின் விளைநிலம் இது
கண்ணீர் பூக்களால் உவர்ப்பாக்கவேண்டாம்
மனிதநேயத்தின் வாழிடமிது-மானுடரே
நம்பிக்கையிழக்க வேண்டாம்

அமைதியின் உறைவிடமிது-அழுகை வேண்டாம்
தியாக தீபமிது-விளக்குகளை ஏற்றி
விட்டில்களை மடிய விடவேண்டாம்

இறைவா!, நாங்கள் வலுவற்றவர்கள்
இழப்புகளால் நாங்கள் உருக்குலையும்போது
எங்கள் இதயங்களில்
நம்பிக்கை என்னும் ஒளி விளக்கை ஏற்றிவிடு

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-25-09-2023

# நெற்றிக்கண்- ஹென்றி மிலர்

---





மீன் பாடும் தேனாட்டில், வானுயரக் கல்லூரி அமைத்து
வாழ்வை அர்ப்பணமாக்கிய வெள்ளைத் துறவிகள், இறைபணியும்,
கல்வித் தொண்டுமாற்றிட, உடல், பொருள் ஆவி அனைத்தையும்
ஆகுதியாக்கி ஞான வேள்ளி யாத்த மகரிஷிகள்

வள்ளல்களின் வாரிசுகளில்
எஞ்சியவராய் லோரியோ-
இறுதி மூச்செடுப்பவராய் மிலர்அடிகள்

புனித மிக்கேல் கல்லூரியின் அதிபராய்-இயக்குனராய்
பல்லாண்டு காலம் அளப்பெரிய சேவை செய்த மாமனிதன்-
முப்பதாண்டுகாலக் கோரயுத்தத்தில்-ஈழத்தமிழனுக்காய்
குரல் கொடுத்த ''வெள்ளைத் தமிழன்''

அமைதிக்காய் பாடுபட்ட வெள்ளைப்புறா
மனித உரிமைக்காய் கூவிய செஞ்சேவல்-இன்று
அழுக்கு மெத்தையில், மலசலம் கழிய-யாருமற்ற
அநாதையாய்ச் சிலுவையில் தொங்கிய அவலம்

அருகில் இருந்தால் நாறும் என்றஞ்சி -விலகி
மன்ரேஸாவில் கூடிக் குளிர்காயும் குரு-லேவியனாய்
இயேசு சபை சுதேசிகள், நாறும் வாய்களில்
நல்ல சமாரித்தன் போதனைகள்

காட்டிக் கொடுத்த யூதாஸ் ஸ்கரியோத்து
அறியேன் என மறுதலித்த பேதுரு-
நம்ப மறுத்த தோமா
பட்டம் பெற்ற-திருச்சட்ட வல்லுனர்கள்

குற்றம் காணும் பரிசேய சதுசேயர், சகாயம் அறியாத
சமுதாயத் தொண்டர்கள், அரசியல்வாதி, அன்னாஸ் கைபாஸ்
சவுலாய் வாழும் பவுல்- எரோது, பிலாத்துகள்
என நிறம் மாறும் பச்சோந்திகள்

***இயேசு சபையில் –இயேசுவாய் யாருமில்லை***
***எல்லாம் வேடதாரிகளே***

அன்பை முழங்கி ஆரவாரிக்கும் ஆன்மீக அண்ணகர்களுக்கு-மனதில்
கடுகளவும் ஈரமில்லை-அத்தியிலையாய் வெண்ணாடை நிர்வாணத்தை மூட
விபச்சார குலச்சந்ததியினருக்கு தம் அகநிர்வாணம் புரியவில்லை
அன்பே தெய்வம் விளம்பரமான நிலை

அருட் தந்தை மரணப்படுக்கையில் அல்லாட
அருகே சக்கர நாற்காலியில்-நடப்பதை -நம்பமுடியாமல்
மனமுடைந்து விக்கித்து நிற்கும் நல்ல நண்பன் யோவானாய்
தள்ளாமை வாட்டும் தந்தை லோரியோ,
நல்ல சமாரித்தனாய் நாடி வந்து சேவை செய்யும்
கனடா நாட்டு வெள்ளைத் தேவதை அன்னா



“ஏலி எலி லமா சபக்தானி” என் தேவனே என் தேவனே
ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர்-இன்றும் இயேசு
தந்தையின் ஈனக் குரலில் கதறிட, கேட்டும் கேளாமல்
எட்டாத உயரத்தில், அன்னாஸ்-கைபாஸாய்
அலங்கார மதவாத இருக்கையில் ஆயன்

கண்டும், காணாமல்கடந்து போகும் குரு, லேவியனாய்
சுதேச இயேசு சபையினரும், -காமலேற் கன்னியரும்,
கல்நெஞ்சங்கள் கண்டு துக்கித்து காணாமல்போன இறைவன்

உழைப்பையும், உதிரத்தையும் ஈந்த வெள்ளை புறா
இறுதி மூச்சிற்காய்ப் போராட, ஆட்டுத்தோல் போர்த்திய ஓநாய்கள்
கூட்டம் போட்டு-மக்களைக் கூட்டி, அடிகளின் சேவையைப்
புகழ்ந்து விழாவெடுக்க வெள்ளைப் புறாவை வேட்டையாடும்
கறுப்பு வல்லூறுகளின் வேசித்தனம்

பிறந்த மண் துறந்து -வாழ்ந்த மண்ணில் கூடுகட்டி, ஆனந்தமாய்க்
கூவி மகிழ்ந்த புள்ளிக்குயில், அநாதையாய் கேவிக் கரைந்து மெல்ல மடிய
ஆறுதல் சொல்ல யாருமில்லை-கோபத்தை அழுகையை, கவிதையாய்
சொல்லிக் கரையும் பிள்ளையின் துக்கத்திற்கும் எல்லைகளில்லை

புல்லரைச் சுட்டெரிக்க நெற்றிக் கண்ணனுமில்லை,
சாட்டையால் அடிக்க இயேசுவும் இல்லை-கள்வர் குகையான
ஆலயத்தில் மதவேசித்தனம், கடவுளும் கற்பனை,
மதமோ அபினியும், போதையுமான மாய விற்பனை

ஏழ்மை, கற்பு, கீழ்ப்படிவு வெற்றுக் கற்பனையாக
வாகனமும், வங்கியில் பணமும் இருக்க,
அண்டவர் என் ஆயன் என திருப்புகழ் பாடும்
அருட்பணிகளின் வாழ்வில் ஏது குறை?

பலியை அல்ல இரக்கத்தை விரும்பும் இறைவனை விற்றுப் பிழைக்கும்
வியாபாரிகளுக்கு, அகவறுமையைத் தவிர ஏதும் குறைவில்லை,
விழிப்புணர்வில்லாத ஆன்மீகப் போலிகளுக்கு, வெண்ணாடையும்
கறுப்பு பட்டியும்  வேஷம் தவிர வேறில்லை

ஒரு பால் கலவியின்பம், சிறுவர் துஷ்பிரயோகம்
திருச்சபையை நாறடிக்க-கண்டித்த நாடுகளுக்கு
அளவில்லை, திசைமாறிடும் விசுவாசப்
பறவைகளுக்கும் நாளும் குறைவில்லை

பட்டம், பதவிகளுக்காய் போட்டியிட்டு, காற்றில் வெற்றுச் சிலுவைகள்
வரைந்து மந்தைகளை மேயும்-ஆட்டுத்தோல் போர்த்திய
ஓநாய்களுக்கு-கற்பும், ஏழ்மையும், பணிவும்
கோஷமும், வேஷமுமன்றி வேறில்லை



உண்மை அறியாத அகக்குருடர்களுக்கு மெய்மை புரியவில்லை,
உண்மையா அது என்ன? வினவிடும் பிலாத்துவிற்க்கும்-
வேடதாரிகளுக்கும் வித்தியாசம் ஏதுமில்லை

ஆமாம் சாமி போடும் கூட்டத்தில் பரபாஸுக்கு விடுதலையும்-
இயேசுவிற்கு சிலுவை மரணமும் தீர்ப்பானது.
பிலாத்து, அன்னாஸ்-கைபாஸுக்கு அதுவே
ஜனநாயகக் கோட்பாடானது?

உள்ளத்தின் பரிபூரண சுதந்திர உணர்வே துறவு
காவி தரித்த போலிகள், துறவிற்கே இழிவு







அன்று கல்வாரியில் இயேசுவின் கொடுமரணம்
இன்று கல்லூரியில் ஒரு புனிதனுக்கு கழுமரம்
தீர்ப்பளித்ததோ-மதம்

நிழல் தந்து, கனி ஈந்து, காவலாய் நின்ற
நெடுமரம் வீழ்ந்தது என்றார்-
கழுமரத்தில் இறைமகனுக்கு நேர்ந்த கதி
இவருக்கும் நேர்ந்ததே என அறிந்தவரோ,
தனிமையில் புலம்பியழுதார்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-09-2023*

# வண்ணக் குரு Rev.Fr.Herbert S.J.



எண்ணிலாச் சோகங்கள் தந்த தமிழ் ஈழ யுத்தம்
மறைந்த வண பிதா ஹேபர்ட் அடிகளை எண்ணிட
மனதிலோ இமயத்தின் பாரம், சூனியத்தை
வெறித்த கண்களிலோ கங்கையின் ஈரம்

மாடி வீட்டுச் சீமான், ஏழை நாட்டில்
குடிவந்த பெருமான், வாழ்வை எமக்கீந்த வள்ளல்
கல்லறையின்றி காணாமற்போன திருவருட் செல்வன்



தந்தையைக் காணாது ஓய்ந்து கிடக்கும்-
கூடைப்பந்தாட்டத் திடல்
உறங்கிக் கிடக்கும் பந்துகள்.

இளமையில் வாழ்வைத் தவமாய் இயேசு சபைத் துறவி
எண்ணற்ற வண்ணக் கனவுகளை எளிய மாணவ
மனங்கள் காண, தன்னை ஏணியாக்கிய அதிசயப்பிறவி

கூடைப்பந்தாட்டம் அறியாத புளியன் தீவில்
உள்ளம் கண்ட கனவுகளை-மாணவ உலகம் காண
அரிய அவர் சாதனைகள்

தனி மனித நலனுக்காய் தவமுனி யாத்த தவமல்ல இது
மாணவ சமூகத்திற்காய், இசையும், கூடைப்பந்தும்
வரமாக-வாழ்நாள் முழுதும் மாமுனி யாத்த அருட் தவம்

இந்திய அமைதி காக்கும் படை-வெபர் மைதானத்தில்-
மக்களை ஒன்று கூட்டி தடுத்து வீடுகளைச் சோதிக்க
உங்களில் ஒருவன் நான் என்று அழையா விருந்தாளியாய்
வந்து எம் அச்சம் போக்கிய தேவமைந்தன்

புற்தரையில் எம்மோடு அமர்ந்து -புன்னகையால்
தெம்பூட்டி கதைகள் பலபேசி -அச்சம் போக்கி
களிப்பூட்டிய காவல் தெய்வம்.
இன்றோ கண்மறைந்த திரு உருவம்

சிறுநீர் கழிப்பதற்கு சிப்பாய்கள் தடை விதிக்க
தடையை மீறி-மாணவர்களை அழைத்துச் சென்று
சங்கடம் தீர்த்த பெருமான், எளிமையின் திருக்கோலம்
இதழ் சிந்தும் புன்னகையில் இயேசுவின் அருட்கோலம்

நண்பனாய், நற்குருவாய் வாழ்ந்த மாமனிதன்
மனிதத்திற்காய் உயிர் ஈந்த தேவமைந்தன், கைகளை விரித்து
புன்னகை பூத்து, காலை, மாலையில் துவிச்சக்கரவண்டியில்
தெருவழியே தொழில் நுட்ப கல்லூரி செல்லும் அதிபர்.

ஏறாவூர், காத்தான் குடி பள்ளி வாயில் படு கொலைகள்
நாட்டையும், உலகையும் அதிரவவைக்க-சிங்கள இராணுவம்
மட்டுநகர் நோக்கி நகர்ந்துவர அச்சத்தில் மூழ்கிய மக்கள்
வாலை ஒடுக்கி, வாயை அடக்கி தூங்கிக் கிடந்த தெருநாய்கள்

வெறிச்சோடிய தெருக்கள், மயான அமைதியில்
முடங்கிய ஊர்கள், அச்சத்தில் வீடுகளை விட்டு
ஆலயத்தில் தஞ்சம் கோரிய மக்கள்



வாழைச்சேனை பங்குத் தந்தையைக் காக்க
தனி மனிதனாய் உந்துருளியில் சென்ற தந்தை
நிலைமை சுமூகமாகத் தனியனாய் திரும்பியவரோடு
இராணுவத்திற்கு அஞ்சித் தன் மகன் பேர்ட்ரம்மை
அருட் தந்தையோடு அனுப்பிய தாய்

வரும் வழியில் வானகம்போன உறவுகள்
காணமல் ஆக்கப்பட்ட நிகழ்வுகள்.
வித்துடலை மறைத்து, நடத்திய விபரீதக்
கொடுமையை மறைத்த கொடியவர்கள்

எரித்தழித்தாரோ? பெரும் பொக்கிஷம் என
மண்ணில் புதைத்து மறைத்தாரோ? இன்றும் புரியாத
இரகசியம், இனவாதத்தின் கொடிய சாட்சியம்

கண்டு சுவைத்த அன்பை, உண்டு மகிழ்ந்த பெருவிருந்தை
விளையாடிக் களித்த நட்பை, இனவாதம் களவாடிச் செல்ல-
கல்வாரியில் இன்றோர் சிலுவைப்பலி
இதயங்களிலோ இன்றும் மறையாத தீராதவலி

பிறந்த பொன்னாடு துறந்து, எம் நாடு வந்த துறவி
இது என் நாடு என வாழ்ந்த முனி-
மாணவ சமூகத்தை உயர்த்திய ஏணி
உயிரால் மண்ணையும் சிவப்பாக்கிய அருட் தியாகி

மண் சிறக்க, மாணவர் வாழ்வு சிறக்க வாழ்ந்த மாமனிதன்
மண்ணிற்கே உரமாக, கண் சிவக்க கண்ணீர் பெருக
வெள்ளைப் புறாவின் உயிரை பிணந்திண்ணி கழுகுகள்
களவாடிப்போன கொடுமை இங்கே

கூடையில் விழுந்து-மண்ணைக் கொஞ்சித் துள்ளும் பந்தும்
காணாமல் ஆக்கப்பட்ட தந்தையை எண்ணிப் புலம்பிட,
இதயமோ கண்ணாடிபோல் நொருங்கிட, எண்ணிட
பெருமூச்சாய் மாறிடும் சுவாசக் காற்று

தமிழனாய் வாழ்ந்த வெள்ளைத் தமிழன், தமிழனாய் மடிந்த
தானைத் தலைவன், பணியே வாழ்வாக-வாழ்வோ தவமாக
பெருவாழ்வு வாழ்ந்த மாமுனி, கொலைப் பிணியால் வாடும்-
கொடியோர் பசிப்பிணி தீர தன்னுயிர் ஈந்த அருட்பணி

அந்திவான் சிவப்பை பூசி அழுத விழிகள் சிவந்திருக்க
அந்தி வருமுன் வாடியதே அழகுத் தாமரை மனம் துடித்திருக்க
தேன் தும்பி பசியால் களைத்திருக்க, என் தந்தை எங்கே ?
மனம் தேடித் தவித்திருக்க, தந்தியறுந்த வீணையில்
தாளாத சோகம், தமிழனுக்காய் சிந்திய குருதியில்-இன்று
இன்னொரு இயேசு கிறிஸ்துவின் தியாகம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra -27-09-2023*

# இதயவீணை தூங்கும் போது

---

Rev.Fr.Lorio SJ.



இனம்புரியாத சோகச் சுனாமி என்னைத் தாக்கிட
இன்று என் இதயத்தின் ஆழத்தில் ஏகாந்தத்தின் ஆட்சி-
இனிய சொந்தம் ஒன்று பந்தம் அறுத்து
சோகம் சொல்லிப் போன துயர நிகழ்ச்சி

மதிய உணவு அருந்திடும் வேளை
மௌனம் கலைத்து அழுத அலைபேசியில்
துயரம் கலந்த குரலில் தந்தையின் மரணச் சேதி
சொன்ன ஜெரால்டின் அருட் சகோதரி

என் உதய காலத்துப் புள்ளிக்குயில்
பூபாளம் பாட மறந்து ஊமையானது
என் இதய வீணையில் முகாரி
ஓயாத ஆலாபனையானது

இறைவனுக்காய் வாழ்ந்த வெள்ளை உள்ளம்
இறை தூபமாகிப் போன குழந்தை உள்ளம்
என் கண்களிலோ கண்ணீர் வெள்ளம்
உறவு சொல்ல இனி ஏது உள்ளம்?



அனலில் விழுந்த புழுப்போல் மனம் துடித்திட
ஓசையின்றி வடிந்த கண்ணீர் ஒரு புறம்-
தந்தையின் துயரம் ஓய்ந்தது என்றே
இறைவனைத் துதித்த உள்ளம் மறுபுறம்.

எம் விடியலுக்காய் பூபாளம் பாடிய-இறுதி
வெள்ளைக் குயிலும் வானகம் போனது
என் கண்களிலோ ஈரம்-
இதயத்திலோ இமயச் சோகம்

குழந்தை உள்ளம் காணும்போதெல்லாம்
குதூகலித்து அன்பைச் சொல்லும்,
கூப்பிய கரங்களோடு -செய்யும் பூஜையில்
மாறாத இறை பிரசன்னம் மனதைத் தொடும்

இனிப்பையும், பழங்களையும் களிப்போடு
உண்டு சுவைத்துக் குதூகலிக்கும் குழந்தை
கனிவோடும், அன்போடும் நன்றி சொல்லி
உறவாடும் அன்புத் தந்தை

முதுமையிலும் ஆங்கிலக் கல்வி புகட்டி
அர்பணமாய்த் தொண்டு புரிந்த தேவ மனிதன்
தள்ளாமையிலும் இறை தந்தையை மறவாத புனிதன்

வாழ்வை ஆகுதியாக்கி மாணவர்களுக்காய்
நூற்ற ஞான வேள்வி, பூதவுடலை மண்ணிற்கு உரமாக்கி
புகழுடம்பாய் மனங்களில் வாழும் சுவாமி

சக்கர நாற்காலியில்-ஐயனின், தனிமைத் தவம்-
மண்ணில் உறங்கும் தன் சொந்தங்களுக்காய்-நித்தம்
இறைவனை வேண்டிடும் ஜெபம்

தள்ளாத வயதில் தாளாத வலியில் எனக்காய் மன்றாடுங்கள்
-சொல்லிய கணம் மனமுடைந்து நானழுது-தலையை
அணைத்து முத்தமிட்டு அன்பைச் சொல்ல
புன்னகை பூத்த வெள்ளை உள்ளம்.

முடியாத நிலையில் முதியோர் இல்லத்தில்
படுக்கையில் கிடந்த பாரிஜாதம்
பார்த்த விழிகள் கண்ணீர் பூத்துக் கலங்கிட
கண்களால் அன்பைச் சொன்ன தேவராகம்.

என் வீட்டு வெள்ளைப் புறா விண்ணோக்கிப் பறந்திட
காக்கைக் கூட்டம் கரைந்து சோகம் கொண்டாடிட
வெற்று கட்டிடமாய் வெறிச்சோடிய மிக்கேல் கல்லூரி
சோபையிழந்த தொழில் நுட்பக் கல்லூரி

ஏற்றிய தீபம் எண்ணெய் வற்றியும்
தன்னை எரித்து ஒளி கொடுத்தது-புயலும்
போரும், சுனாமியும் ஊரைத் தாக்கியபோதும்
மண்ணைப் பிரியாமல் ஒளிர்ந்த ஞான தீபம்

வாழும்போது பகிராத அன்பு-மடிந்தபின் அழுதென்ன,
ஆயிரம் இரங்கலுரைகள் ஆற்றிப் புகழ்ந்தென்ன?
சிலைவடித்து மகிழ்ந்தென்ன புண்ணியம்?
ஓ மானுடா நாம் மனிதர்கள்தானா?

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-09-2023*

# புனித மிக்கேல் கல்லூரி-St.Michael 's College-Batticaloa

---

## "A College Second to None"




கல்லெடுத்து, மன்னன் கரிகால் வளவன்
கட்டியதோ கல்லணை-முத்தமிழ்
சொல்லெடுத்து கவிச்சக்கரவர்த்தி கம்பன்
சுவையுறு கவியமாய் பாடியதோ ஸ்ரீராம கதை




கல்லைக் குடைந்து காலத்தால் அழியாத மாமல்லபுரத்தை
படைத்ததோ, பல்லவ மன்னன் நரசிம்மன் கதை--பெரும்
கல் எடுத்து சோழ மாமன்னன் இராஜராஜன்
கட்டியதோ தஞ்சைப் பெருங்கோயிலின் கதை

மன்னனுமல்ல, மா கவிஞனுமல்ல,
கருணை வள்ளல் இவன்-வாழ்வை
இறைவனுக்கே தவமாக்கிய மாமுனிவன்

மானுடம் உய்ய, மாணவர் வாழ்வு சிறக்க
ஆமை வடிவான அழகிய புளியன் தீவில்
அருட் தந்தை பேர்டினான்ட் பொனல் கட்டியதோ
கல்விக் கண் திறக்கும் திருக்கோயில்

நூற்றி ஐம்பது ஆண்டுகள் சென்றும் காலத்தால் அழியாத
புனித மிக்கேல் கல்லூரியோ-மாணவரின் எதிர்கால
எழுச்சிமிகு வாழ்விற்குப் புதுவாயில்




பல்லாயிரம் மைல் கடல் கடந்து, படகால் ஆறு கடந்து
சொல்லொண்ணாத் தியாகங்கள் புரிந்து
பத்தொன்பதாம் நூற்றாண்டில் கட்டிய கல்லூரி

கல்விக் கதிர் வீசும் கலங்கரை விளக்கம், இனம், மதம் கடந்து
"**இறைவனுக்கு நிகரேது**" (Quis Ut Deus)
என்ற விருது வாக்கியம் ஓம்பிடும்
அருட் தந்தையின் இறை வணக்கம்

பிரித்தானியா , பிரான்ஸ் அரசுகள் வியக்க பெருநிதி கொண்டு
கட்டிய மாளிகை- ஏழையரும் கல்வியைப் சங்கநிதியாய்ப் பெற்று மகிழ
அருட் தந்தை பொனலோ-பெருவள்ளல் -"பொன் விதியை"
வாழ்வால் இயம்பிய அருள் நிதியோ இறைவன் எமக்கருளிய பெருநிதி

அள்ள, அள்ளக் குறையாத கல்விச் செல்வம்
அனைத்து மாணவர்களுக்கும் உரித்தாக
நிமிர்ந்து பார்த்து நெஞ்சம் இறைவனைப் போற்ற
வியப்புறு கட்டிடக்கலையோ விஸ்வகர்மாவையும் ஈர்க்க
விண்ணுயரக் கட்டிய அறிவாலயம்

1868 ஆம் ஆண்டில்-யாழ் ஆயர் *Mgr Christoper Bonjean*
அன்புக் கட்டளைக்கமைய-தமிழ்
அருட் தந்தை பிரான்சிஸ் சேவியர் பிலிப்
ஐந்நூறு ரூபாயுடன்-மீன்பாடும் தேன்நாட்டில்
தோற்றுவித்த பாடசாலைகளோ மூன்று




ஆங்கிலம் கல்வி மொழியாக ***புனித மிக்கேல் கல்லூரி,***
***புனித சிசிலியா பெண்கள் பாடசாலை,***
தாய்த் தமிழ் கல்வி மொழியாக ***புனித மரியாள் பாடசாலை***

ஆலயம், கல்லூரிகள் அமைக்க பாஸ்கல் முதலியார்
வழங்கிய நிலங்கள் இன்றும் வள்ளல் புகழ் பாடும்,
கல்லூரிகளும், மாதா கோயிலும் அருட் தந்தையர்களின்
அர்ப்பண வாழ்விற்கு வானுயர ஆனந்த சாட்சியம் பகிரும்

"எல்லாப் புகழும் இறைவனுக்கே" என்று தம் வாழ்வை,
தீப, தூப, மலரஞ்சலியாய் இறைவனுக்கு அர்ப்பணித்த பெருமான்கள்.
இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழ தம் வாழ்வால்
அன்பு இறைவனை ஏற்றிப் போற்றிய புனிதர்கள்



1873 இல் ஐம்பத்தியேழு மாணவர்களுடனும், மூன்று
ஆசிரியர்களுடனும், திரு ஜோசப் ஆபிரகாம் அதிபராக
ஆரம்பமான புனித மிக்கேல் கல்லூரி.

ஐயன்.ஆபிரகாம் தலைமை ஆசிரியராக
1925 வரை திருப்பணி புரிந்து ஓய்வு பெற "Bene Merenti"
விருது வழங்கி கௌரவித்த -புனித பாப்பரசர்




உகந்த கட்டிடமில்லாக் கல்லூரியை,
ஆளுநர் Sir. Hendry MacCallum
" The building which was dubbed a shanty"
என்று விமரிசிக்க, வசை கேட்டு வாடிய செவிகளுக்கு-
வாழ்த்தொலியாய், இன்னிசையாய் அற்புதச் சரித்திரமானது
அருட் தந்தை பொனாலின் மகத்தான சாதனை

இறை பக்தியில் பேரின்பமுற்ற பெற்றோர் ஈன்ற தம் குழந்தைகள்
ஐந்தை, இறைவனுக்கே அர்ப்பணித்து பேருவகை கொள்ள
அண்ணன் தம்பியராய்த்-தம்மை
இயேசு சபைக்கு அர்ப்பணித்த பெருமான்கள்

இலங்கை வந்து -மீன் பாடும் தேனாட்டில்
இறை பணியாற்றிய மகான்கள்-மூத்தவர் அருட் தந்தை
சார்ள்ஸ், இளையவரோ பேர்டின்ட் பொனல்



1895 இல்-பிரான்ஸ் நாட்டு இயேசு சபையினரால் திருமலை மேற்றிராசனம்
ஆயர் Mgr Charles Lavigne SJ தலைமையில் உருவாக
ஆயரின் கனவோ அமைக்கும் கல்லூரி
**"எதற்கும் சளைத்ததல்ல, இரண்டாவதும் இல்லை"**
என்றும் முதன்மையானதே உறுதி மொழியானது

அருட் தந்தை பொனலின் அழைப்பை ஏற்று
ஆளுநர் Sir. Hendry McCallum-16.7.1912 அன்று
அடிக்கல் நாட்டிடத் தொடங்கிய கட்டிடப் பணிகள்

நாற்பத்திரண்டு குடும்பங்களின் நிலங்களைப் பெற்று
ஆயர் கண்ட கனவை நனவாக்கிட
அயராது உழைத்த உத்தமனோ வித்தகன்

ஆளுநர்கள்.Sir. Hendry MaCallum, and Clifford , உடன்
அன்றைய அரசாங்க அதிபரும், கட்டிடப் பணிக்கு அளப்பெரிய
ஆதரவு வழங்கி ஊக்குவித்த பெருந்தகைகள்



கட்டிடக்கலை நிபுணர் அருட் தந்தை போனல்,
அருட் தந்தை Alfred Royer உடன் இணைந்து கல்லூரியை வடிவமைக்க
அருட் சகோதரர் Wright பிரதான பொறியிலாளராய்
வரைபடத்திற்கு உருக்கொடுக்க-ஓவியமான கல்லூரி

ஊன் மறந்து, உறக்கம் துறந்து கடின உழைப்பால்
கல்லூரி, மண்ணில் முளைத்தெழுந்து பூத்துக் குலுங்க
நனவான மாமனிதர்களின் கனவு, ஓவியமோ காவியமாக
விண்ணவன் மனதிலோ தீராத மகிழ்வு

அருட் தந்தை போனலின் அளப்பெரிய உழைப்பிற்கு
அயராத துணை நின்ற அருட் தந்தையர்
D' Arras, Queste and Gouth

பிரான்ஸ் நாட்டில் பிச்சையேற்றும், பிரிட்டிஷ் அரசின்
மானியத்தோடும் (Annual grant) கட்டிடும் ஞான சாலை வளர்ந்திட,
கல்விப் பணிப்பாளர் Mr. Harward-1915 இல் பெருநிதியாய்
அரசு சார்பில் வழங்கிய 5000.00 ரூபாய்

இயேசு சபைத் துறவிகளின்-தன்னலமற்ற சேவையில்,
பெருமதிப்பும், புனித மிக்கேல் கல்லூரியின் அபிவிருத்தியில்
அக்கறையும், ஆர்வமும் கொண்ட Mr. E.B. Denham-
முன்னாள் கல்விப் பணிப்பாளர், தேசம் மாறிப்போனாலும்-
நேசம் மாறாது ஆபிரிக்காவிலிருந்து தொடர்ந்தும்
செல்வத்தை வாரி வழங்கிய வள்ளல்

கடும் நிதி நெருக்கடியின் மத்தியில், தளராத ஊக்கத்தோடும்,
தருவார் இறைவன் என்ற நம்பிக்கையோடும், தம்மை ஒறுத்துத்
தந்தையர் கட்டிய அறிவாலயம், மாணவருக்கான சரணாலயம்
மட்டக்களப்பின் மாண்பான வரலாறு
*(St.Michael's College, the Pride of Batticaloa)*




இருளில் வாழ்ந்த மக்களுக்கு
ஞான ஒளி கிடைக்கத் தம்மை ஆகுதியாக்கி
இயேசு சபை துறவியர் யாத்த ஞானயக்ஞம் இது

இது கல்லும். மண்ணும், சாந்தும், இரும்பும்,
மரமும் கொண்டு கட்டிய " ***வெறும் கட்டிடமல்ல***"-
***மாமனிதர்கள் கனவில் பூத்த மகத்தான இலட்சியம்***

மாணவர் கல்விக் கண் திறக்க, ஊன், உறக்கம் துறந்து
இரத்த வியர்வை சிந்தி, இயேசுவைப் பின் தொடர்ந்து கல்வாரி
வழி நடந்த, கடின உழைப்பிற்கு கிடைத்த பெரும் பரிசு

இறை அன்பும், மானுட சேவையும் இரு கண்களாக
ஆகுதியாய்த் தம்மை அளித்தே- கர்ம யோகிகள் யாத்த
ஞான வேள்வியில் பிறந்த திருக்கோயில்
கல்வியால் வாழ்வு உயரக், கற்றதை வாழ்வாக்கிச் சமூகம் உயர
உண்மைக்கு சான்று பகிர்ந்து உலகு உயர-ஒரே குடும்பமாய்
இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழக் கட்டிய ஞானபீடம்

ஞான தீபமிது- அணையும் சுடரல்ல
கல்வியின் கலங்கரை விளக்கமிது- கல்லறையல்ல
கல்லணையல்ல- கல்விக் கங்கையின் கங்கோத்ரம்

இரும்பும், கல்லும், மண்ணும், மரமும்,
நீரும், சாந்தும் தந்தையை கண்டு மகிழ்ந்திடும்
தந்தையின் வியர்வைத் துளிகள் சேர்ந்திட
இன்புற்றே இணைந்து எஃகுவாய் மாறிடும்

மண்ணுக்குள் மறைந்த அத்திவாரமும், விண்ணோக்கி
உயர்ந்த கோபுரங்களும்-கல்வியால் மாணவர் உயர்ந்து
விண்ணைத் தொட வேண்டும், அண்ணலின் கனவானது
என் கனவை நனவாக்க வாருங்கள் மாணவர்களே!.
இன்றும் அருட் தந்தை விடுக்கும் அழைப்பானது

சிலையாய் வாயிலில் நின்றாலும் சிந்தையில் தியாகம் நிறைய
இன்றும், மாணவ நெஞ்சங்களைத் தொட்டுத்தழுவிட தென்றலாய்
உலாவிடும் தந்தையின் ஆவி, "அன்பு இறைவனுக்கு நிகரேது"
இறை துதி பாடும் தியாகி, வாழ்வைத் தவமாக்கிய கர்மயோகி




ஆசிரியர் பற்றாக் குறை தீர-அழைத்து வந்த, பிரெஞ்
அருட் சகோதரர்கள் Marist Brothers
முற்ற வெளிக்கு அருகில் அமைத்த ஆச்சிரமம் "Maris Stella".

Tudor Batteries மூலம் இயங்கும்
மின்சாரப் பிறப்பாக்கியை கல்லூரியில் நிறுவி
அருட் தந்தை பொனல் ஆற்றிய புரட்சி

திரு. சவரிராஜா மாஸ்டர் சாரணர் இயக்கத்தை வளர்த்துப் புரிந்த
மாணவர் எழுச்சி, 1912 Junior Cambridge examination
பரீட்சை எழுதிய மாணவர் பெற்றதோ நூறு சத வீத வெற்றி

ஆய்வுகூட உபகரணங்களை அருட் தந்தை வரைபடமாக்கிட
-உதவியாளர் Oswin Sellar அவற்றிற்கு உருக்கொடுக்க
1915 இல் அமைக்கப்பட்ட McCallum Hall ஆய்வு கூடமோ-
இலங்கையின் தலை சிறந்த கல்லூரி ஆய்வுகூடமானது.

அருட் தந்தையோ, அற்புத விஞ்ஞான ஆசிரியராக
விஞ்ஞானம், மெய்ஞானம் கற்பித்து, கல்வியால் மாணவர்
உயர்ந்திட, நின்ற இடத்தில் ஏணியாய் தம்மை நிறுத்திய யோகி

பல கல்விமான்களை உருவாக்கிய கல்லூரி, மயில்வாகனன் கற்றதும்,
ஆசிரியராய் கல்வி கற்பித்ததும் புனித மிக்கேல் கல்லூரியில்,
பின்னாளில் வித்தகன் விபுலானந்தனாய் புகழ் பெற்றது,
கல்லூரிக்கும், பிறந்த மண்ணிற்கும் பொன்னாரமானது

பெருமை எல்லாம் மாமனிதர் பொனலையே சார, பெருமானோ
புகழ் கடந்த கர்மயோகியாய், இறைவனுக்கே தம்மை அடிமையாக்கி
மாணவருக்காய் வாழ்ந்ததும், மடிந்ததும் இங்கே
மாணவ மணிகளுக்கு உத்வேகமளிக்க-சிலையாய் மாறி
கல்லூரி வாயிலில் வரவேற்பதும் இங்கே

நிமிர்ந்த நடையும், நேர் கொண்ட பார்வையும், நீண்ட வெண்தாடியும்,
அருள் பொழியும் முகமும், ஆழ்ந்த அமைதியும், இளைஞர்களைக் கவர,
அன்போ பெருநிதி, கல்வியோ அழியாத  செல்வம் -கற்று ஒழுகிட
வாருங்கள் மாணவரே!. அன்புக்கரம் நீட்டி அழைத்த ஞானச்சித்தன்

எ∴கு விழிப்பார்வையில் ஞானம் ஒளி வீச
நீண்ட மொழி பேசாத அமைதி அவர் நீதியாக-பெருமானார்
கல்லூரி விறாந்தையில் நடந்து வர எங்கும் நிலவும் அமைதி
மாணவர் செலுத்தும் வணக்கமான பெருநிதி

கல்வியும், ஒழுக்கமும் ஓம்பிட-மாதத்தின் கடைசி வெள்ளியன்று-
சிறந்த மாணவர்க்கு சிறப்பு பரிசுகள் உரித்தாகும் , ஆசிரிய, மாணவர் குழாம்
கல்லூரி மண்டபத்தில் கூடி அளவளாவிடப் பிறந்திடும் சிறு சப்தமும்
அருட் தந்தையின் வருகையால் ஓய்ந்து அமைதி நிலவிட, ஆளுமை மிக்க
மாமனிதரின் அழகிய பிரசன்னம் ஓர் அற்புத சத்சங்கமாகும்




குருவே தெய்வம் எனும் சீடனின் உயர் பக்தி-
குரு பிரசன்னமே சத் சங்கமாக
மாணவ மனங்கள் ருசிக்கும் ஆனந்த சித்தி

மாணவ உள்ளங்களை ஈர்த்து ஆழப்பதியும் வண்ணம்
கற்பித்தலில்ஈடு இணையற்ற பெருவித்தகன்-நித்தம்
கல்விக் கடலில் நீராடும் புதுமைப்பித்தன்

மாணவர் கவனம் சிதறும்போது-இரு கரங்களினாலும் -கரும்பலகையில்,
இருவேறு கணக்கை-ஒரே நேரத்தில் எழுதி, வியந்து மாணவ
வழிகள் நிலைக்குத்திட மாயங்கள் புரிந்த மேதாவி -வியந்து
விபரிகின்றார் அருட் தந்தை John W. Lang, S.J –
Palm Fringed Coast என்னும் தன் நூலில்
(History of Trincomalee Batticaloa Diocese-from 1895-1967)

மாணவர் குழு சூழ்ந்திட-விழிகளோ வியந்திட, Sextant-வழியே-
மட்டக்களப்பின், நெடுங்கோடு, அகலக்கோட்டினை காட்டி
மாணவர்களைக் கவர்ந்த சுந்தரன், ஒழுக்கத்தை வாழ்வால்
ஓம்பிய தவசீலன் மாடுகளோ, நாய்களோ,
கல்லூரி வளாகத்தில் நடமாட அனுமதிக்காத கூத்தன்

காலம் பொன்னானது, கடமை கண்ணானது என
பணி வாழ்வைத் தவமாக்கி, மாணவரை ஊக்குவித்து
கடின உழைப்பால் உயரக் கற்றுக் கொடுத்த கர்மவீரன்

அருளுரை நிகழ்த்திடக் குருவானவர் இல்லாதபோது அவரே
அருளுரை நிகழ்த்துவார், மாலை ஆராதனைக்கு கல்குடாவிலோ,
கல்முனையிலோ, குருவானவர் இல்லை என்ற சேதி வந்த போது
துவிச்சக்கர வண்டியில் சென்று ஆராதனை நடத்தி-
அங்கே உறங்கி, அதிகாலையில் கல்லூரி திரும்புவார்

துவிச்சக்கர வண்டியில் மூதூர் வழியாய் திருகோணமலை சென்று-
பின்அநுராதபுரம் சென்று, புகையிரதம் மூலம் கொழும்பு சென்று
இந்தியாவுக்குப் பயணமானவர், அதே பாதையில் துவிச்சக்கர வண்டியில்-
ஊர் திரும்பிய வரலாறு அதிசயத்திலும் அதிசயம்

எளிமையின வடிவம், என்றும் இறையடிமை, நான் என்ற மாறாத இனிய தவம்
ஒவ்வொரு மாணவனையும் தன் பிள்ளையென அன்பு செய்த அருட் தந்தை
இரசாயனவியல், தாவரவியல், தூய கணிதம், பௌதிகவியல், புவியியல்
பாடங்களில் புலமைமிக்க அறிஞன், கேம்பிரிட்ஜ் முதுநிலை மாணவர்
வினாத்தாள்களை ஆய்ந்தறிந்து, விடைகளைத் தொகுத்து கற்பித்த தேவகுரு




புவியியல் பிடித்த பாடமாக, நவீன ஆய்வுகூடமோ, அயராத உழைப்பின்
பரிசாக-நடமாடும் கலைக்களஞ்சியம, மாணவர் அறிவும் ஆர்வமும் வளர
காந்தமாய் மாணவரை கவரும் கருணை மனம்
கல்வியை வேள்வியாக்கிய ஞான குணம்

கல்வி கடந்த போதனையில் மாணவ உள்ளங்கள்
விழிப்புணர்வில் நிலைத்து -தம்மைத் தாமே கண்டு கொள்ள,
கூழாங் கற்களை வைரங்களாய் மாற்றிய சித்தன்

ஒவ்வொரு மாணவனின் தனித்துவத்தை
மதித்து போற்றிய மனிதநேயப் பித்தன், தனித்துவமே மாணவனின்
தனிச் செல்வம் எனப் பறைசாற்றிய வெள்ளைக் கூத்தன்

இளைய தலைமுறை சுடர் வீசி ஒளிர்ந்திட
ஏந்திய ஜோதி தலைமுறை தலைமுறையாய்
தொடர்ந்து ஒளி வீசிட-தன்னை எரித்த ஞான தீபம்

***"உலகின் ஒளி நீங்கள், உலகின் உப்பு நீங்கள்"***
விழிப்புணர்வைத் தூண்டிய இன்னோர் இயேசு கிறிஸ்து

எளிமையின் வடிவம், கருணையின் உருவம்
உறங்கியதோ ஒரு மரப்பலகை
ஒன்று அல்லது இரண்டு செங்கற்களோ
உத்தமனார் தலையணை

கல்லில் தலை வைத்துப்-பலகையில் உடல் வைத்து உறங்கிடும் உத்தமனார்
உள்ளத்திலோ, ஆடிடத் தொட்டிலின்றி , அடங்கிடக் கல்லறையின்றி
தொழுவத்தில் பிறந்து நாடோடியாய் அலைந்து நற்செய்தி சொல்லி
மானுடம் வாழ-முள்ளில் மகுடம் சூடி , மூன்றாணிகளால்
சிலுவையில் தொங்கி, இரவல் கல்லறை கொண்ட மனுமகனின் நேசம்
உண்மையும், கருணையும் உத்தமனார் சுவாசம்

சொல், செயல், சிந்தனை எல்லாம் மாணவர் உயர்வுக்கே அர்ப்பணமாகிட
வழியும், உண்மையும் , வாழ்வையும் வேள்வியாய் யாத்த முனி-
ஆகுதியாய்த் தன்னை அர்பணமாக்கிய மகரிஷி, மதுகாரிகள்போல்
மாணவர் சூழ மணம் வீசித் தேன் ஈந்த செங்கமலன்

புல்லுக்கும், முள்ளிற்கும் பூவைக் கொடுத்துப் பூரித்து
தந்தையின் உள்ளத்தில் நாளும் கருணையாய்ப் பூத்த இறைவன்
கற்க கசடறக் கற்றவை கற்றபின், நிற்க அதற்குத் தக-குறளக்கேற்ப
மாணவர் வாழ்வு ஓம்பிட உழைத்து இன்புற்ற இறைமகன்

பெண்களுக்கு கல்லூரியில் இடமில்லை, கடுந்துறவில்
கற்பில் நிலைத்த மாமுனி, காலவெளியில் கல்லூரியில் உலாவிய
நடமாடும் பல்கலைக் கழகமோ மெய்ஞானி

புனித மிக்கேல் கல்லூரி அமைத்தலே அன்னாரின் வாழ்வானது
ஆயர் Lavinge and Fr. Robichez கண்ட கனவு
அருட் தந்தையால் நனவானது

பல்லாண்டு காலக் கல்லூரி நிர்வாகி, கல்லூரி விதிகளும்,
ஒழுங்கு முறைகளும் பசுமரத்தாணியாய் நெஞ்சில் நிலைக்க-
பத்தொன்பது ஆண்டுகள் மறை பரப்பு இயேசு சபையின்
Superor Regular அர்ப்பணிப்பே அன்னாரின் எதிர்பார்ப்பு

எப்போதும் தக்க பதிலும், செய்ற திறனும் , ஐயன் எதிர்நோக்கு
***பசும் பொன்னாய், வைரமாய் அவர் தரம்,*** நிகரற்ற தலைமைத்துவம்-
இறை வரம், கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டின் உருவம்
பண்பாளனாய்ச் சிறு விதியையும் மீறாத உயர் ரகம்

எழுபத்தி ஐந்து வயதிலும் ஓய்வு வேண்டாத தொழிலாளி
ஆலயத்திலும், பாவசங்கீர்தன கூட்டிலும் அயராது பணியாற்றி
சிறுபணியையும் பணிவோடு மகிழ்ந்தே புரிந்து-சாந்தமும்
தாழ்ச்சியும்நிறைந்த பணிவாழ்வில் தன்னை தேய்த்து மணந்த சந்தனம்.
இருள் நீங்கிடத் தன்னை எரித்த தியாக தீபம்

கணக்கெடுப்பில் வல்ல புலி, 1895 முதல் 1937 வரையிலான
கணக்கெடுப்பில் , 3900 இருந்து 14,745ஆக உயர்ந்த கத்தோலிக்கரின்
எண்ணிக்கையை-பிறர் போற்ற, 42 வருட உழைப்பில் -அறுவடையோ
சிறிது என்று தாழ்ச்சி கொண்ட பெருமான்

வைகாசி 7.1945 ,புனித மிக்கேல் தூதர்
காட்சி கொடுத்த திருநாளுக்கு முந்திய இரவு,
நாட்ஸி ஜேர்மனி சரணடைந்த நிகழ்வு
நேரமோ இரவு 10:45

சுந்தரனைக் கடும் சுரம் வாட்ட, உடல் வெப்பநிலை 108° F ஐ எட்ட
சந்திரனும் தேய்ந்தே வருந்த-கர்த்தரின் திருமந்திரத்தை மனம் ஓதி இன்புற-
வானவரும் மகிழ்ந்திட, வா மகனே என்று வாரியணைத்த இறைவன்

என்றும் உம் சித்தம் என்றே-தந்த மூச்சை, இறை
தந்தையிடம் ஒப்படைத்த , அருட் தந்தையோ கர்மயோகி

கற்பூர ஆரத்தியை இதயம் எடுக்க கண்ணீர் அஞ்சலியை
விழிகள் தொடுக்க, அருட் செல்வர்-அருகே அழுது நின்ற
அருட் தந்தை Hamilton



மறு நாள் இரண்டாம் உலகப் போர் வெற்றியை
முற்றவெளி மைதானத்தில் மக்கள் கொண்டாட
ஆரவாரமின்றி ஆலையடிச் சோலையில்
தனியாய் ஓய்வெடுக்கப்போன புனிதன்

தியாக தீபம், அறிவுத்திறன், தார்மீகப் பண்பு
ஒன்றிணைந்த கருணையின் திருவடிவம்
தாழ்ச்சியின் உருவம்-தன்னலம் கருதாத மகான்

நடந்து செல்லக் காண்பதோ பெரு வரம்-
"***இவர் போல் இன்னோர் மனிதர் இனியும் வரக்கூடுமோ?*** "
எண்ணிட ஏங்கும் மாணவ மனம்

நிறை குடமாய் வாழ்ந்த பெருமானுக்கு இறப்பென்பதில்லை
என்றும் நிலை வாழ்வே எண்ணிட இறை துதி பாடும் இதயம்
ஈடு செய்ய இயலாத அவர் பிரிவை நினைந்திட
இரு விழிகளிலோ கங்கையின் பிரவாகம்





அன்னாரின் அளப்பெரிய சேவையைப் பாராட்டி
நினைவு முத்திரை வெளியிட்டு-அருளாளனுக்கு
புகழாரம் சூட்டிய இலங்கை அரசு

புனித மிக்கேல் கல்லூரி-கட்டிடமல்ல -அருட் தந்தையின் வாழிடம்
கல்லூரியல்ல இது-கலை மகனின் ஆலயம்
யாவருக்கும் கல்வியை வாரி வழங்கிய **மாணவ சரணாலயம்**

ஒன்றே குலம் ஒருவனே தேவன்-யாதும் ஊரே யாவரும் கேளீர்
யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும், மூத்த குடி முழங்கிய
வார்த்தைக்கு, வாழ்வால் உயிர் கொடுத்த வெள்ளைத் தமிழன்
பிரெஞ், அமெரிக்க இயேசு சபைத் துறவிகள் வாழ்க வாழ்கவே

மல்லிகையோ சுவாசத்தில் மணக்க, முல்லையோ நேசத்தில் கலக்க
முத்துநகையோ இதழ்களில் நிலைக்க கிளி மொழியாத் தமிழ் ஒலிக்க
அன்பே வடிவான இறை குழந்தைகள் -எல்லாம் இறைவனுக்கென்று
தம்மை வெறுமையாக்கிய கர்ம யோகிகள் வாழிய வாழியவே!




எரியும் மெழுகுவாத்தியாய் தம்மை எரித்து ஒளிர்ந்த தீபம்,
பல மெழுகுவர்த்திகளை ஏற்றி ஆகுதியாய் ஒளி கொடுக்கும் யாகம்
நூற்றி ஐம்பது ஆண்டுகள் கழிந்தும் அணையாத
தியாக தீபம் அருட் தந்தை பேர்டினட் பொனல்
வாழ்க! வாழ்கவே!



மாதா, பிதா, குரு தெய்வமாய் - என்
வாழ்வில் கலந்த தெய்வீக உறவுகளுக்கு ,
**பிள்ளை மனம் போற்றிப் பாடும் நன்றிப் பாடல் இது**

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க எல்லோரும் நலம் வாழ்க**
Pax Ravichandra -08-10-2023

# இயேசு சபைத் துறவிகள்

---

பெற்ற தாயையும் பிறந்த பொன்னாட்டையும் விட்டுப்பிரிந்து,
வரமான கல்வியையும், தவமான விசுவாசத்தையும், கைவிளக்காய்க்
கொண்டு கடல் கடந்தவர், கரையேறிய நாடுகளில் ஆலயங்களும்,
பாடசாலைகளும் அமைத்தே அரிய தொண்டுகள் ஆயிரமாயிரம் புரிந்தார்



ஏழ்மை, கற்பு, கீழ்படிதலை தவமாக்கி இயேசுவுக்காய் வாழ்ந்தவர்,
சாதி, மதம், இனம், நிறம் கடந்து கல்விக்கண் தந்த
சத்திய புருஷர், கோடிச் சுகம் துறந்த ஏழைத் துறவியர்



எம்மை உயர்த்திட- நின்ற இடத்தில் ஏணிகளாய் நின்ற துறவிகள்
எங்கும் ஒளி பரவிட-உருகும் மெழுகுவர்த்திகளாய்
தம்மை எரித்தே இறைபணி ஆற்றிய பெரியார்கள்.

இன்றும் இவர் புகழை நன்றியோடு -நல்லிதயங்கள்
போற்றிப் புகழ்ந்திட, பூதவுடல் மறைந்தும் -புகழுடம்போடு
யுகபுருஷர்களாய் மனங்களில் வாழ்கின்றார்
இறப்பென்பது இவர்களுக்கில்லை

மாறிடும் உலகில் மனிதனாய் தலை நிமிர்ந்து வாழ
கல்விக் கண் திறந்த பெரியார்கள்
உண்மையும், அன்பும், ஒழுக்கமும் உயர் விழுமியங்களாக
வாழுங்கலையை கற்பித்த ஆசான்கள்
கூழாங்கற்களை வைரங்களாய் மாற்றிய சித்தர்கள்

இறைவனின் அன்புப் பிள்ளைகள்-இந்த அரிய
வெள்ளைத் துறவிகள்-மீன் பாடும் தேனாட்டிற்கு
புனித மிக்கேல் கல்லூரி தந்த புனிதர்கள்
வாழ்க வாழ்கவே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-09-2023

# கல்விச் செல்வம்

---

ஆலமர நிழலும், திண்ணைப் பள்ளிக் கூடங்களும்
கல்விச் சாலைகளான காலத்தே- கல்வியும்
எண்ணும் எழுத்துமாய் கட்டுக்குள் நின்றிட,
கற்றவரோ சிலர், கல்லாதவரோ பலர்



விவசாயம், மீன்பிடி, நெசவு
கால்நடை வளர்ப்பு வாழ்வாதாரமாக
நூற்றாண்டுகளாய் அந்நியர் எம்மை
அடிமை கொண்ட காலமது

சொந்த பந்தம் துறந்து, வாழ்வின் பெருநிதியான
இளமையும் இறைவனுக்கே அர்ப்பணித்து
நாடோடிப்போதகரின் நற்சீடராய் கடல் கடந்து-
கல்லூரி அமைத்த பெருவள்ளல்
அருட் திரு பொனல்-வண வில்லியம் ஓல்ட்

யாவருக்குமாம் கல்வி செல்வம், யாவருக்குமாம்
அள்ள அள்ளக் குறையாத அழியாத செல்வம்
யாவரும் கற்று மேதினியை ஆளலாம்
வாழ்விலே சூரிய சந்திரராய்ச் சுடர் வீசலாம்

ஏணிகளாய் நின்ற இடம் நின்று
வானில் எம்மை ஏற்றி விட்டார்
கற்பூர தீபங்களாய் தம்மை எரித்தே
எம் வாழ்வில் ஒளியேற்றினார்.

இனம். மதம். மொழி கடந்து-கல்விச் செல்வத்தை
இன்புற்று அள்ளி வழங்கிய வள்ளல்கள்
எல்லோரும் எம் மதம் என்றே
கல்வியை வேள்வியாக்கிய ஞானிகள்



உயர் கல்வி எட்டாத நிலவாக
***மெதடிஸ்த மத்திய கல்லூரி,***
***வின்சன்ட் மகளீர் கல்லூரி அமைத்த***
***பெருமானார் வில்லியம் ஓல்ட்***

எட்டுமாத குறுகியகால வாழ்வில்
மட்டு நகரில் அரும்பணி செய்த பெருமுனி,
இறைபதம் அடைந்தும், இறவாப்புகழோடு வாழும்
ஞானவேள்வி யாத்த மகாரிஷி




கல்விக் கூடங்கள் ஊர்கள் தோறும் தோன்றிட
கற்று மாணவ சமுதாயம் உயர்ந்திட
உறவுகள், உற்ற இன்பம் கண்டு மகிழ்ந்தார்,
உலகையே ஒளியூட்டிய உத்தம பாதிரிகள்

காலையில் படிப்பு, மாலையில் விளையாட்டு
ஒழுக்கமும், உண்மையும், அன்பும்-நாளும்
ஓம்புதல் நன்றே என ஊக்குவித்த வள்ளல்கள்

வந்து போகும் சத்திரமான உலகில் வந்தோம், வாழ்ந்தோம்
என்று போகாமல், எம்மை வாழவைத்த தெய்வங்களை
எம் விடியலுக்காய் கானமிசைத்த கோகிலங்களை
தொண்டு புரிந்த தெய்வங்களை
தொழுது வாழ்த்தல் நம் தலையாய கடன் அன்றோ

வற்றாத நதியான கல்வியை வாரி வழங்கிய தெய்வங்கள்
நம்மிடை குடி கொண்ட பொற்காலமது
கல்விச் செல்வத்தை ஏழைகளும்
சொத்தாக்கிட பிறந்த புது யுகம் அது

***யாதுமாகி தம்மை அர்ப்பணித்த தியாகச் செம்மல்கள்***
கற்பூர ***தீபமாய் தம்மை அர்ப்பணித்த இறைமனிதர்கள்***
***காலத்தை வென்று வாழும் தெய்வங்கள்***
***வாழிய வாழியவே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-25-09-2023

# நினைவேந்தல்

---



நெஞ்சம் கனக்க, மனதில் ஆயிரம் தாமரைகள் மலர்ந்து மணக்க
உறங்கிட்ட தெய்வங்களை ஒவ்வொன்றாய் நினைத்துப் பார்க்கின்றேன்
ஒவ்வொரு இதழாய் முகர்ந்து மணக்கின்றேன்-நெஞ்சம் மணக்க
கண்களில் நீர் துமிக்க நெகிழ்ந்து நிற்கின்றேன்



எம்மை உயர்த்திட-நின்ற இடத்தில் ஏணியாய்
நின்ற தெய்வங்கள், எம் இருள் போக்க -தம்மை
மெழுகாய் எரித்த தீபங்கள்
தேவனின் எழுதாத வார்த்தைகள்

பிறந்த பொன்னாட்டை விட்டு பறந்த வெள்ளைப்
பறவைகள், பனிக்காலம் கழிக்க இடம் பெயர்ந்த
புள்ளினங்கள் அல்ல இவை-.இறை பணிக்காய்
வாழ்விடம் துறந்த தியாகிகள் இவர்கள்



அறிவாலயமாயக் கல்லூரி எழுப்பிய மாமனிதர்
போனல் அடிகள், அறிவும், ஒழுக்கமும், இறை பக்தியும்
ஊட்டி உண்மையின் ஒளியில் நடத்திய தேவபுருஷர்கள்

மல்லிகையோ சுவாசத்தில் மணக்க, முல்லையோ நேசத்தில் கலக்க
முத்து நகையோ இதழ்களில் நிலைக்க, தத்தும் கிளியாய் தமிழ் ஒலிக்க
அன்பே வடிவான இறை குழந்தைகள், எல்லாம் இறைவனுக்கென்று
தம்மை வெறுமையாக்கிய கர்ம யோகிகள், தியாகச் செம்மல்களே

சின்னஞ்சிறு பிராயத்தில்-நேசம் காட்டி-நற்கருணை வீரன்
வாசிக்க தந்து, தேவ பக்தியில் வழி நடத்திய வெபர்
இறுதி வரைக்கும் தந்தையாய் என்னை அன்பு செய்த தேவமகன்



“KID” என்றழைக்கும் பொழுதெல்லாம், மலரும் முகத்தில்
ஆயிரம் தாமரைகள், முதுமை தள்ளாட, நோய் வருத்த
அருகில் அமர்ந்திட , வருடிக் கொடுத்து என்னை அணைத்த
அன்புக் கரங்கள், இன்றும் என்னை வாட்டும் பிரிவின் வலிகள்.

பத்து மணி இடைவேளையில், பாவசங்கீர்தனத் தொட்டியில்
அவர் யாகம், பக்தி மார்கத்தில் என்னை வழி நடத்திய யோகம்
தந்தையாய் என் கரம் பிடித்து நடத்திய அன்பின் பாவம்

குதூகலித்து குளித்துக் களிக்கப் பாசிக்குடாவை
காட்டிய வெள்ளைப் புற-கடலில் மிதந்தபடி
எம்மை கண்காணிக்கும் காவல் தேவதை-வெபர்



மீன் பாடும் தேனாட்டில், மீன் வடிவில் ஆலயம் அமைத்த
வள்ளல் மேயர், தொழில் நுட்பக் கல்லூரி நடத்தி
இருண்ட வானில் ஒளிர்ந்த, நட்சத்திரம்- லோரியோ



கட்டை விரலை வெட்டிக் காண்பித்து வித்தைகள் புரிந்து
வியப்பிலாழ்த்திய இளைஞன், பின்நாளில் தோழனாய்,
தந்தையாய் மாறி அன்பு செய்த மிலர்

ஆயிரம் கதைபேசி, ஆழமாய் அனைத்தையும் கற்றறறிந்திட
என்னை வழி நடத்தி-பண்போடு என்னை அரவணைத்த அறிஞர்
மரணத்தருவாயிலும் என்னை அன்பு செய்த மகான்
எளிமையைத் தன் உடமையாய் கொண்ட உத்தமர்.



ஒழுக்கம் நேரம் தவறாமையை
ஒரு பிரம்பால் காட்டி ,அன்பு செய்த பிதா நீ (Nee)

சுருட்டு புகையும் சந்தனமாய் மணக்க ஆங்கிலத்தில்
புலமை மிளிர, ஒழுக்கத்தை ஓம்பிய உன்னத நிர்வாகி
என் எழுத்தை தன் எழுத்தாய் மாற்றி
இன்புற்ற மனிதர் அருட் தந்தை பீரிஸ்.



எப்போதும் சிரித் முகம், எளிமையிலும் உயர்ந்த
இறைகுணம், கூடைப் பந்தாட்டத்தின் இலக்கணம்
தமிழனுக்காய் உயிர் கொடுத்த பண்பின் இருப்பிடம்-ஹேபர்ட்



தேவதாயின் மேல் தெய்வீக பக்தி, குறவரோடு
குறவனாய் வாழ்ந்த திருமகன் வயதான காலத்தில்
கட்டிப் பிடித்து முத்தம் கொடுக்க, கண் பார்வை மங்கிய
தந்தை அன்போடு புன்னகைக்க-வாழ்வை
தீபமாக்கிய நறுமணத்துாபம்- குக்

சிரித்த முகத்தில் சேவையின் வியர்வை
எப்போதும் எங்கும் ஓடித்திரிந்து
உழைத்த மகான் கூளி

அழகிய தமிழ் மகனாய், தூய தமிழில் உறவாடும் மனிதர்
சிரித்த முகம் பெரியாராய் வளர்த்த தாடி-தமிழ் ஈழம்
மலருமுன்னர் வழியேன் என்ற பிடிவாதம் பிடித்த -டெல்

விவிலியத்தின் மேல் காதலை தூண்டிய குரு
அறிவுத் தேடலின் தூண்டல், என் ஞானத்தேடலுக்கு
வழிகாட்டிய அன்புத் தோழனாய் போல் சற்குணநாயகம்.
ஞான ஒடுக்கத்தின் ஞான தீபம்



சிறுவன் என் கேள்விக்கு அறிவுலகை
என் முன்னே திறந்து, அற்புதமாய் விளக்கிய ஹேலி.

யூதாஸ் ஸ்கரியோத்தின் இறப்பை , ஆய்ந்து
விளக்கி, என்னை மகிழ்வித்த வித்தகராய்-கிறவுதர்
தளர்ந்த வயதிலும் முதிர்ந்த ஞானம்.
என்னை கவர்ந்த அறிஞன்



திருப்பலியை தெய்வீக பலியாய் காண- இருவிழிகளிலும்
நீர் வடிய-என்னை உருக்கிய மனிதர் றெக்ஸ் ஓக்கஸ்-
அறிவுத் தேடலில் நான் கண்ட புதிய லாவோட்ஸீ

ஒரு சிறு பிரம்போடு-
அமைதி காத்து ஒழுக்கம் விழுமிய
மோத்தா-பெஸில் அடிகள்




எண்ணிப் பார்க்கையில்-எண்ணில்லாத் தியாகம் புரிந்த
வெள்ளை புறாக்கள், என் வானில் இன்றும் பறந்திட,
இதயம் மகிழ்ந்திட இருவிழிகளிலும் ஆனந்தக் கண்ணீர்,
பிரிவைச் சொல்லி அழுதிட ஓங்கித் துடிக்கும் இதயம்.

இன்று எல்லாம் ஓய்ந்திட, கல்லூரி களையிழந்து-
ஆலயம் மூடிக் கிடந்திட-டெனிஸ் கோட்டில் புற்காடு-
புனித லோயலாவின் சிலையடியில் வெபர்-மிலர் அடிகளின்
வித்துடல்களை விதைத்திட்ட நிலைப்பாடு

இறை மகனாய் வாழ்ந்த வெள்ளைப் புறாக்கள்
எம்மை தூக்கி அரவணைத்த தாயுள்ளங்கள்
இதயத்தில் நன்றி பெருக்கெடுக்க, எல்லாப் புகழும்
இறைவனுக்கே எனும் இதயத்தின் நினைவேந்தல்கள்

இந்தக் கானக்குயில்கள்-கால நேரமின்றி எமக்காய் பாடின-
இந்த வெள்ளைச் சேவல்கள் எம் விடியலுக்காய் கூவின
இந்த வெள்ளைப் புறாக்கள் எம் விடுதலைக்காய் மடிந்தன
கல்லில் பொறித்த நினைவாய்,-கலையாத வண்ணக் கனவாய்
நெஞ்சில் வாழும் தெய்வங்களை மறப்பது எங்ஙனம்.?

பசுமை நிறைந்த நினைவுகளை, பாடிக் களித்த பருவங்களை
அள்ளித் தந்த கல்லூரி உறவுகள், அம்மையப்பனாய்
அன்பு செய்த தெய்வங்களை மறப்பதா? மடிந்தாலும்
முடியாது, மறக்கவும் முடியாது

முப்பதாண்டுகால யுத்தம் எம்மை வாட்டி வதைக்க
அச்சம் ஆட்டிப் படைக்க, , தமிழருக்காய், அமைதிக்காய்
குரல் கொடுத்த வெள்ளைப் புறாக்கள்-இதுவே
எம் தாயகம் என்ற எம் நேசபிதாக்கள்

பெற்ற தாயும். பிறந்த பொன்னாடும் துறந்து,
கல்விச் சேவையை வேள்வியாக்கி-தம்மையே ஆகுதியாக்கி ய
வெள்ளைத் தெய்வங்கள் கற்றுத்தந்த பாடத்தை மறந்தோம்
திரை கடல் ஓடித் திரவியம் தேடினோம்

**மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கி கொண்டாலும்**
**தன்னை இழப்பதனால் அவன் அடைவது என்ன?**

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-25-09-2023

# ஒற்றைக் குயில்- Rev. Fr. Lorio SJ

---

பூத்துக் குலுங்கிய நந்தவனம் பூவிழந்து பாழ்பட-
புள்ளிக்குயில்கள் பாடி மகிழ்ந்த பூந்தோப்பில்
ஒற்றைக்குயிலின் சோக ஆலாபனை தொடர்ந்திட,
சத்தமின்றி உருளும் சக்கர நாற்காலி

மண்ணில் உறங்கிடும் உறவுகளைக் கண்டு மனம் வெதும்பிக் கண்ணீர் சிந்திட-
ஆகாயத்தை வெறித்த பார்வையில் நிலைத்த ஏக்கம், எல்லாம் மாயைதான
எனச் சலித்திட வெள்ளைத் துறவிகள் கண்ட வண்ணக் கனவும் கலைந்து
பழங்கதையாய் போனதே என வாடும் மனதில் மாறாத துக்கம்



சுற்றும் சக்கர நாற்காலி விறாந்தையைச் சுற்றி வர
யாருமற்ற தனிமை, நெஞ்சை நெருப்பாய் சுட்டெரிக்க
முதுமையும். நோயும் மனம் சுமக்கும் பாரச்சிலுவை,
ஜெஸ்தமெனியான வாழ்விலோ இரத்த வியர்வை

ஏகாந்த அமைதியில் ஏக்கத்தோடு கரையும் ஒற்றைகுயிலாய்
சக்கர நாற்காலியில் முடங்கிய வாழ்க்கை
வாழ்வை அன்புத் தவமாக்கியவருக்கு-தனிமை-
முதுமையில் இறை ஆசிரான மேன்மை?

கோயில் முற்றத்தில், சிலுவையில் அறையுண்ட மகனும்
பெற்ற அன்னையும் உற்ற துயர் கண்டு நெஞ்சு வருந்த
ஆடிய தொட்டிலும்-அடங்கிடும் பெட்டியும் மனதில் தெரிய-
தள்ளாத வயதிலும் தாயை எண்ணி உருகும் குழந்தை உள்ளம்.
விழிகளை ஈரமாக்கிட மெல்லக் கசியும் கண்ணீர் வெள்ளம்.

அந்தி வெயில் வானில் மஞ்சள் பூசிட
தகிக்கும் வெப்பம் களைப்பைத் தந்திட
மார்பில் தலைசாய -தனியனாய்
சக்கர நாற்காலியில் தூங்கி வழியும் தந்தை

கண்களில் நீர் வடிய, கண்ட காட்சி நெஞ்சை நொருக்கிட
வெறித்துப் பார்க்கின்றேன்-இதுதான் வாழ்வா?-மனிதனாய்,
புனிதனாய், இயேசுவாய் வாழ்ந்தால் சிலுவைதான் பரிசா?

அந்தியில்-வாகையில் வந்தமர்ந்து, ஆயிரம்
கதைபேசி கரைந்து மகிழும் காக்கை கூட்டமாய்
மன்ரேசாவில் சுதேசி இயேசு சபை-தனிமையில்
சிறகொடிந்த அன்னமாயத் தவிக்கும் அருட் தந்தை



இரவு வானம் நட்சத்திரப் பூவனமாய் பூத்துக் குலுங்கிட
வெண்மேகங்கள் காற்றாடியாய் மெல்ல அசைந்து மிதந்திட
தனிமையில் உலாவரும் வெண்ணிலா, மாடியில்
தனிமையில். முதுமையில் வாடும் தந்தையோ தேயும் நிலா

நீலவானில் சிலுவைக் வடிவில் பறக்கும் கொக்கு-
சிலுவையடியில் உருகி எரியும் மெழுகுவர்த்தி
என் தந்தையே என் தந்தையே ஏன் என்னை கைவிட்டீர்?
இன்றும் கேட்கும் இயேசுவின் குரலிலோ ஆதங்கம்
தந்தையின் மனதிலோ சொல்லியழ முடியாத சோகம்

***நடைப்பிணங்களாய் வாழ்வோர் மத்தியில்***
***மனுமகனாய், இறை மகனாய்- மாமனிதனாய்***
***அருட் தந்தை லோரியோ***
***காணத்தான் மனிதனாய் யாருமில்லை***
***வெண்ணாடைப் போலிகளுக்கு குறைவில்லை***

*Is this the Society of Jesus? -or Society of the Judas Iscariot?*

***இயேசு சபையா இது, இல்லை அன்னாஸ்.***
***கைபாஸுக்களின் பேரவையா இது?***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-25-09-2023

# Pink Trumpet Flowers
## இளஞ்சிவப்பு எக்காள மலர்கள் (HYANDROANTHUS)

---






பிறந்த மண் துறந்து-இறைபணிக்காய்-நாம்
வாழும் மண்ணில் கூடமைத்த வெள்ளைப் புறாக்கள்
தம் வாழ்வை ஆகுதியாக்கி- எம் வாழ்வு சிறக்க
ஞான யக்ஞம் யாத்த அருட் தந்தையர்கள்

வாழ்ந்த இல்லம் மெல்லப் பாழடைய-நாளும்
ஒலித்த செபங்களும், திருப்பலிகளும் மறைந்திட
கறையான் புற்றும், காளான்களும்
கல்லூரி வளாகத்தில் முளைத்திடும் அவலம்.

பொற்றாமரைக் குளம் வற்றிட, அற்ற குளத்து
அறுநீர் பறவைகளாய் உறவுகள் விட்டுப் பிரிந்திட
ஒட்டியும் ஆம்பலுமாய் ஒட்டி நின்ற
அருட்தந்தை ஹென்றி மிலர்-லோரியோ உறவுகள்

அறிவாலயமாய்-ஞானபீடமாய் ஒளிர்ந்த இல்லம்-ஒளியிழக்க,
-ஆனந்தமும் அஸ்தமிக்க மூப்பும், பிணியும், தனிமையும் வாட்டிட-
மாடியில் சக்கர நாற்காலியில் உலாவி- வெபர்-மிலர்
சமாதிகளைப் பார்த்து கண்ணீர் சிந்தும் தந்தை லோரியோ

அன்றோ அது அன்றில் பறவைகளின் சரணாலயம்
கலகலப்புக் குன்றாது, கனிந்த புன்னகை மறையாது
இன்னிசை ஒலித்த இன்பப் பூங்காவனம்.

அருட் தந்தை-ஹரல்ட ஜே.வெபர், குக், ஹென்றி மிலர்,
டெல் மாமோ -நீ, லோரியோ. ஹேபியர், கூளி-என
வெள்ளைப் புறாக்கள் கூடி மகிழ்ந்த அன்பின் சாம்ராஜ்யம்.

எம் விடியலுக்காய் நாளும் கூவிய செஞ்சேவல்கள்
நாம் வாழ்வில் ஏறி உயர்ந்திட-தம் வாழ்வை
அர்ப்பணமாக்கிய தியாக ஏணிகள்.

கண்ட கனவும் கலைந்து பொய்யாய், பழங்கதைதையாய் மாறிட
-இதயம் வடிக்கும் செந்நீரும், கண்ணீரும் வெளியே தெரியாது
கம்பீரம் குன்றாது, கற்சிலையாய்-கல்லூரி வாயிலில்

**மாணவரே கனவு காணுங்கள்**
என வேண்டி நிற்கும் **அருட் தந்தை பொனல்**



கல்லறைகளில் உறங்கியும், கனவுகளில் முளைப்போம்
என்றே கனத்திடும் இதயங்களோடு -அருகருகே
**உறங்கிடும் அருட்தந்தை வெபர்-மிலர் அடிகள்**

சிலையும், சமாதியுமாய் வெள்ளைச் சித்தர்கள் மாறிட
கண்ட கனவைக் கலைத்து மனதை உடைத்த நிஜம்கள்

எங்கிருந்தோ வந்த புள்ளிக்குயிலொன்று
க்கூ-க்கூ என கூவி கேவிக் கரைய
சோகத்தால் வாடி உதிரும் வாகை மலர்கள்
மண்ணுக்குள் அழும் மாமனிதர்களின் இதயங்கள்

கல்லூரி வாயிலில் பூச்சொரிந்து வரவேற்ற-பிங் ட்ரம்பட் மரங்கள்
பட்டுப் போயிட, ஒழுக்கம், ஆன்மீகம், உயர்கல்வி-
உன்னத விளையாட்டு எல்லாம் கனவாய் கலைந்திட
கல்வியும் வியாபாரமாய் மாறிட்ட காலத்தே
நிறுவனமாய் மாறிட்ட கல்லூரி?



1963 இல் கல்லூரி நுழை வாயிலில்-இருபுறமும்
இளஞ்சிவப்பு மலர்கள் பூத்துக்குலுங்க
வருக வருக என பூமழை பொழிந்து
வரவேற்கும் பிங் ட்ரம்பட் மரங்கள்

வானுயர்ந்த கல்லூரி கம்பீரமாய்க் காட்சிதர, நிமிர்ந்த நடையும்,-
நேரிய பார்வையும் கொண்டு வாழ்வில் நடைபோடு எனச்
சொல்லாமல் சொல்லும் குருவாய், தாயாய், கும்பிடத் தோன்றும்
தெய்வமாய் தோற்றமளித்த புனித மிக்கேல் கல்லூரி.

ஆலயக் கதவுகள் விரியத் திறந்திருக்க அமைதியில் செபிக்கும்
மாணவர் ஒரு புறம், கூடைப் பந்தாட்டம் சூடுபிடிக்க விளையாடும்
மாணவர் குழு மறுபுறம் கூடி நின்று பார்த்து
இரசிக்கும் நண்பர் கூட்டம் நாற்புறம்

மணி ஒலிக்க-நிசப்தம் ஆட்கொள்ள,அதிபரின் மேற்பார்வையில்
ஒன்றாய்ச் செபித்து-ஒழுங்காய் அணிவகுத்து நடந்து
வகுப்பறையில் நுழைந்திடத் தொடங்கும் படிப்பு

அமைதி, ஒழுக்கம், நேரம் தவறாமை
கல்வி, விளையாட்டு, இறைவணக்கம்,

பெரியோரை போற்றல், வாசிப்பு என நாளும்
உயர் விழுமியங்களை ஓம்பிட அழைப்பு



கடின உழைப்பே வெற்றிக்கு வழி இறைவனுக்கு நிகர் யார்?
கல்லூரியின் விருது வாக்கு
மாசு, தூசு இல்லாத் தூயகம் பார்த்து இரசிக்க-
பசும்புல் வெளியில், சிவப்பு. ஊதா, வெள்ளை, நீலம் என
பூத்துக்குலுங்கும் போகயின்விலா மரங்கள்

பசுமை கூத்தாட, போகயின்விலா பூத்தாட, முக்கனி மரங்களும்,
மூங்கில் தோப்பும் சூழ்ந்த சோலையில் கம்பீரமாய் நிற்கும்
கல்லூரி, பார்த்தவர் நெஞ்சில் பரவசம் பொங்க
அறிவாலயத்தின் ஆனந்த லாகிரி



இது கல்லும் சாந்தும் கொண்டு எழுப்பிய கட்டடமல்ல
இலட்சியமும், உழைப்பும் மிளிர, ஊன் கரைய
உதிரமும் வியர்வையும் ஒன்றாய் சிந்திட
***பிரான்ஸ் தேசத்து புனிதத் துறவி அருட் தந்தை பொனல் எழுப்பிய***
மொழி கடந்த அறிவாலயம்-மதம் கடந்த ஞானபீடம்

உயர் நோக்கும், உன்னத இலக்கும் கொண்ட
இலட்சியப் பெருங்கனவு-மீன் பாடும்
தேன் நாட்டின் முதுகெலும்பு.

இன்றோ நோக்கும், இலக்குமின்றி- கல்லூரி மாறிட
வனப்பிழந்து வாடி -கட்டிடங்கள் மலிந்து
தூய்மை குன்றி பாழடையும் அவலம்

பூட்டிக் கிடக்கும் ஆலயம்
வனப்பிழந்து புல் வளர்ந்து காடு வளரும் டெனிஸ் கோர்ட்
வெள்ளைத் துறவிகள் மெல்ல மறைந்திட
மீகாமன் இன்றித் தத்தளிக்கும் கப்பலாய் கல்லூரி

அரசு நடத்தும் கல்லூரி- பணி வாழ்வு மறைந்து
பண வாழ்வுக்காய்- மலிந்த ஆசிரியர்கள்
கல்வியும் வியாபாரமாய் மாறிட
கனவாய். பழங்கதையாய் மாறிட்ட கனவுகள்.

காற்றுப்போன கூடைப்பந்து, கலைந்துபோன இலட்சியக் கனவு
ஆயுதப்போராட்டம் வலுப்பெற-இராணுவமும், இயக்கங்களும்
பிள்ளைகளைக் கடத்திட- இரத்த ஆறு பெருகி ஓடி-தாய்குலத்தின்
கண்ணீரும், கதறலும் இறைவனை கதறி அழைத்திட

நாடு கடந்த தமிழ் அகதிகள்
சொத்தும் சொந்தமும் இழந்த குருவிகள்




நல்லோரை இழந்து-சோகத்தால் வாடிய தேசம்
எரியும் டயர்களில் மணந்த பிணவாசம்

துளிர்விட்ட விழுதும் மண்ணை தொட
ஆணிவேர் விட்ட அஞ்சாத மாமனிதர்கள்-
***அருட் தந்தையர் மிலரும், ஹேபியரும்***

விட்டுப் பிரியோம் எம் மண்ணை-இம்மண்ணோடு
ஒட்டிப் பிறந்த இரட்டையர் நாம்-இதுவே எம் தாயகம்
வெள்ளைத் தமிழர்களாய் போராடி, விடியல் காண
செஞ்சேவல்களாய் கூவி, வெண்புறாக்களாய் அமைதி நாடி
காவல் தெய்வங்களாய்த் தமிழர்களை காத்த நேரம்



காக்க சென்ற-அருட் தந்தை ஹேபியரை
களவாடிச் சென்ற-இனவாத எரிநெருப்பு
மண்ணோ- தீயோ மறைத்திட
மனமுடைந்தழுத மிலர் அடிகள்

இம் மண் எம் மண், இம் மக்கள் எம் மக்கள் என முழங்கி
வெள்ளைத் தமிழனாய் -தனித்து
மனித உரிமைக்காய் போராடிய இறைமகன்

2016 ஒரு மாலைப் பொழுதில்-நண்பன் -ஜெகனோடு
அருட் தந்தை மிலரை சந்தித்தபோது, சுண்ணம் காணாச்
சுவர்கள் வண்ணமிழந்து, சோபை இழந்து வாடி நிற்க
நூலாம் படை படர்ந்த அழுக்கு அறை



ஊன்று கோலில் நடக்கும் மாமனிதர்
சுவரை வெறித்துப் பார்த்து தனியே அமர்ந்திருந்த காட்சி
ஜெஸ்தமெனி தோப்பில் -இரத்த வியர்வை சிந்தும்
இயேசுவின் அவலக்காட்சி

அழுக்கு மெத்தையை சுற்றி -நுளம்பு வலை
அழுக்குச் சுவர் எங்கும் நூலம் படை
மங்கிய ஒளி சிந்தும் அறையில்
கலையாத கனவுகளாய்-ஓயாத அலைகளாய்
வந்து மோதும் வாழ்ந்து மறைந்த பிரெஞ்-அமெரிக்கத்
அருட்தந்தையர்களின் நினைவலை

கல்லூரி வளர்ச்சிக்காய் கோடிகளை கொட்டிய வள்ளல்-
ஏழ்மையும், முதுமையின் இயலாமையும் வருத்த
கைதிபோல் தன் அறைக்குள் தனிமைச் சிறையிருக்க
துன்புறும் இயேசுவாய் கண்டு மனம் துயருற்ற நேரம்

நொருங்கிய இதயம் -நூலாம் படைகளை துடைத்து
அறையை சுத்தம் செய்ய மெல்லச் சிரித்த வெள்ளை மனிதர்
அறையின் நூலாம் படைகளை அகற்றிச் சுத்தமாக்கினாய்-என்
அகத்தின் துயரை கூட்டிச் சுத்தமாக்க உன்னால் கூடுமோ?
சிரிப்பில் தொக்கி நின்ற துயரம்-என் இதயத்தை
இமயச் சோகம் நொருக்கிய நேரம்



அகவிழிப்பில்லா-சுயநல கூட்டத்தே
அணையாத ஜோதியாய் -அருட் தந்தை மிலர்

மாறாத அன்போடு கட்டியணைத்து-
நெற்றியில் முத்தமிட்டு-கனக்கும் இதயத்தோடு
இறைமகனுடன் கழித்த இன்பம் நெஞ்சை நிறைக்க
எல்லாம் மாயை என்று இதயம் கனக்க
கடவுளை வேண்டி விடைபெற்றோம்.

மனமுடைந்து -துன்புற்றுத் தனிமையில் இறந்திட
அடக்க விழாவில் பலநூறு அதிதிகள்-
அலறும் ஒலிபெருக்கி-ஆரவாரப் பேருரைகள்

பாண்ட் வாத்திய குழு இசைக்க, வித்துடலைச் சுமந்து
ஊர்வலம் வந்து, புனித மரியாள் பேராலயத்தில்
-ஆயர் தலைமையில் திருப்பலி
இங்கு இன்றொரு இறைமகனின் புதிய கல்வாரிப்பலி




மரித்த ஏழ்மைக்கோ விலை உயர்ந்த சவப்பெட்டி-
மனித நேயமில்லா பரிசேய மனங்களோ
நாறிடும் குப்பைத்தொட்டி

விழா எடுத்து விதைத்து விளம்பரத்திற்காய் படமெடுத்து
"முகநூலில" சேதி வெளியிட்டு
மரித்தவரை மறந்த நடைப்பிணங்கள்,
அருட் தந்தையின் உள்ளமாய்-புதைகுழியில்
உருகி எரியும் மெழுகுவர்த்திகள்



பாதை மாறிய பயணங்கள், வசந்தம்
கழிந்த துயரங்கள்-காலவெள்ளத்தில்
வரலாறான வெள்ளை மனிதர்கள்
பலரும் அறியாத துயர நினைவுகள்

வாயிலில் வரிசையாய் நின்ற இளஞ்சிவப்பு
எக்காள மலர் மரங்கள் பட்டுப்போயிட
பூமழை பொழிந்து வரவேற்கும் நிலையும் மறைந்திட
சோகம் சொல்லியழும் வீப்பிங் விடோ மரங்கள்

பூவனமாய்க் கல்லூரி மாறிட, இளஞ்சிவப்பு எக்காள மலர்கள்
வருக வருக , வரவு நல்வரவாகுக என்றே பூமழை பொழிந்து வரவேற்க-
காற்றில் மெல்ல அசைந்து-அழகு நாட்டியமாடி
என்னைத் தழுவி மண்ணைத் தொட்ட  மலர்களின் அழகு-
மனதுக்குள் இன்றும் மறையாத நினைவாய் இனிக்க
இதயம் கனத்திட கண்களில் மெல்லக் கசியும் கண்ணீர்
எல்லாம் மாயைதானா?



அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே நண்பனே-
இந்த நாள் அன்றுபோல் இன்பமாய் இல்லையே
அது ஏன் ஏன் நண்பனே? நண்பனே?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-25-09-2023*

# தந்தையும் மகனும்

---

தந்தையை இழந்த அறியாப் பருவத்தில்
தாயைத் தேற்றிட வீடு வந்த தெய்வம் நீ
அறிவு துளிர்க்க இறை வழி நடக்க
இறைவன் தந்த காவல் தெய்வம் நீ

நற்கருணை வீரனாய் வாழ-இயேசுவே நான் உம்மை நேசிக்கின்றேன்
தேவதாயே, என் தாயே நான் உம்மை நேசிக்கின்றேன்-
நீ சொல்லித் தந்த ஜெபங்கள்-இன்றும்
நெஞ்சம் சொல்லி இன்புறும் தவங்கள்





பாவசங்கீர்தனக் கூட்டில்- இடைவேளையில்-
வெள்ளைப் புறா உன் வாசம்-தூய வாழ்வே
நீ சொல்லித் தந்த ஞான உபதேசம்.

கல்லூரி விட்ட பின்னரும் தொடர்ந்த உறவு
கலைச்சங்கமாய் -அருட் தந்தையர்
மிலர். குக், ஹேபாட் உடன் -மாலையில்
தொடர்ந்த ஆனந்த உரையாடல்களின் நிகழ்வு

ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூண்றி
தந்தை-மகனாய்  வளர்ந்த நம் உறவு-
தள்ளாத வயதிலும் தந்தையாய் உன்தன் பேரன்பு
என்றும் இறைமகனாய் வாழ்ந்த உந்தன் பெருவாழ்வு



“வெண்ணாடை தைத்துத் தந்ததை”விழாவாய்க் கொண்டாடி
வெள்ளைப் புறா நீ வீடு வந்து -சின்னப்பிள்ளைபோல்
அன்னையிடம் காட்டி மகிழ்ந்து என்னைப் போற்றிப் புகழ்ந்தாய்



ஒரு நாள் படம் பார்க்க பலரும் கூடிஅமர்ந்திருக்க
படத்தைப் போடாது தாமதித்தாய்-அனைவரும்
ஏன் என வியந்திருக்க, நான் வந்தவுடன் அகமகிழ்நதே
படத்தைப் போட்டு-அன்பால் என்னைத் திணறடித்தாய்

என்றும் இறைவழியில் நான் நடக்க-இருளிலும்
ஒளிர்ந்த ஞான தீபம்
என் நம்பிக்கை தளரும்போதெல்லாம்
இறை நம்பிக்கை ஊட்டிய தேவதீபம்



கல்லூரி ஆச்சிரமம் களையிழந்து புயலால் வாடிட
அழுக்கடைந்த அருட் தந்தையர் ஆடைகளை
அன்னையும், அக்கையும் அகமகிழ்ந்து கழுவித் தந்திட
அணைத்தே என்னைக் கொண்டாடி
வீடு வந்து நன்றி சொல்லி வாழ்த்தி மகிழ்ந்த தெய்வம்

அருட் தந்தை டெல் வீடு வந்து-அன்புத் தந்தை
உம்மைக் காணாது தவிக்கின்றார், உம் அன்பு அவருக்கு
அருமருந்து-மறவாது தினமும் மாலையில் வாருங்கள்
சொன்ன சேதி , நெகிழ்ந்த மனதில் பூத்த ஆனந்த ஜோதி



மூப்பும், பிணியும் வாட்டிய காலங்களில்-மகனாய்
உன்னோடு கழித்த மாலைப் பொழுதுகள்
புண்பட்ட உடல் கண்டு புண்ணான என் மனம்
வருந்தாதே மகனே எனத் தேற்றிய பண்பட்ட பொன் மனம்

மண்ணில் உன்னுடல் உறங்க-மனமோ
நீர் வற்றிய குளமாய் வருந்த
நீயில்லா உலகோ நிலவில்லா வானானது
தேன் மலரின்றி உன் தேனீ பசியால் வாடுது




சிறார்களுக்கு உன் அன்போ அமுதிலும் பெருவிருந்து
“மச்சான்” என அழைக்கும் குரல் கேட்டு
மகிழ்ந்து பூரிக்கும் உள்ளங்களில்
தேனாய் ஊற்றெடுக்கும் பேரானந்த உறவு

நாற்பத்தைந்தாண்டுகள் எம்மோடு வாழ்ந்த வாழ்வோ
இறைவனுக்காய் நீ நூற்ற பெருந் தவம்-அன்பும்,
இறை தொண்டும் அப்பா நீ அருளிய வரம்

**இறை நேசனே-மனிதநேயத்தின் பெருமகனே**
**கத்தும் கருவான் நிலவும் காசினியும் சாட்சியாக**
**என் சித்தம், நினைப்பு, செய்கை உள்ளவரை -ஒரு போதும்**
**என் உள்ளம் உன்னை மறவாது-இது சத்தியம்**

மூடாது திறந்திருக்கும் உன் அறை
வாடாது மலர்ந்திருக்கும் உன் முகம்
உனைக் காணாது கலங்கும் பிள்ளை மனம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க எல்லோரும் நலம் வாழ்க**
Pax Ravichandra - 26.09.2023

# வெள்ளைத் தேவதையும்-கறுப்புச் சிறுவனும்

---

1963-கல்லூரியில் இரண்டாம் வகுப்பு மாணவன் நான்
வெண்ணாடை அணிந்த வானதூதர்களாய் அருட் தந்தையர்கள்
தம்மையே ஆகுதியாக்கி-எமக்காய் ஞான வேள்வி யாத்த
மகரிஷிகள், கல்விக்கண் ஈந்திடும் இறைமகன் வாரிசுகள்



மட்டுநகர் மாணவர் வாழ்விற்கு-
புனித மிக்கேல் கல்லூரியோ கலங்கரை விளக்கம்
தம்மை எரித்து ஒளி வீசிய அருட்தந்தையரோ
இறையன்பின் புது முழக்கம்

அது ஒரு பொற்காலம்-நினைத்தாலே
இனிக்கும் நினைவுகள் -இன்றும் நெஞ்சில் நிலைக்க
என் வாழ்வின் வசந்தகாலம்

சிறுவர் நாம் சூழ்ந்து நிற்க -தன் பெருவிரலை வெட்டி
அசைத்து வியந்திட வித்தைகள் செய்யும் மந்திரவாதி-
எம் ஆனந்தம் கண்டு குதூகலிக்கும் வெள்ளை
இளைஞனோ இறைசோதி



வளர்ந்து இளைஞனாகிட-கட்டிக் கரும்பாய்
குரு-சீடனாய் வளர்ந்த இனிக்கும் உறவு
காலம் தாண்டியும் கலையாத வண்ண நினைவு

ஒரு நாள் இரவு வானைச் சுட்டிக்காட்டி
நட்சத்திர மண்டலங்களை விளக்கிய ஆசான்
மறுநாள், வானியல் படத்தைக் காட்டி
அறிவுச் சுடரைத் தூண்டிய இறை நேசன்

கல்லூரிப் பணிப்பாளர்-மாலையில்- புல்வெட்டும்
இயந்திரத்தோடு கல்லூரி முற்றத்தின் புற்களைச் செதுக்கி
கல்லூரிக்கு அழகு சேர்த்த மாகலைஞன்
திருப்பலியை அழகு நயத்தோடு-செந்தமிழிலும்
ஒப்புக்கொடுத்த அமெரிக்கத் தமிழன்.

கோர இனவாத யுத்தம் நாட்டைத் தீய்க்க
மனித உரிமைக்காய் குரல் கொடுத்த புள்ளிக்குயில்
ஈழத்தமிழன் உரிமைக்காய் போராடிய
வெள்ளைத் தமிழன்-



மானுட விழுமியங்களின் விடியலுக்காய் கூவிய செஞ்சேவல்.
மனித நேயமிக்க மாமனிதன், சிங்களம் மறைத்த-
கொல்லப்பட்டோர், காணாமல் ஆக்கப்பட்டோர் சேதிகளை
வெளிச்சத்திற்கு காட்டிய சுந்தரன்

ஒரு நத்தாருக்கு முந்திய அந்திமாலையில்
அருட் தந்தையர் ஆச்சிரமத்தில்
அருட் தந்தையர் வெபர், ஹென்றி மிலர்
கூடி உவகையோடு தொடந்த உரையாடல்

பார்வை மங்கி-வயதான தந்தை குக் மெல்ல விரித்த
ஷேட்டுடன் நடந்து வர, பொத்தன்களைப் போட்டு
அரவணைத்து நான் மகிழ ஒலித்த
சைலன்ட் நைட் ஹோலி நைட் பாடல்

இப்பாடலின் மூல மொழியோ ரவி, ஜேர்மனி-பிரான்ஸ்-ஜேர்மணி
நாடுகளுக்கிடையே பல்லாண்டுகளாய் தொடர்ந்த யுத்தம்
பதுங்கு குழிகளில் ஒளிந்து படைகள் சிந்திட
ஆறாய் ஓடிய இரத்தம்

டாண்!, டாண்!என ஒலித்த மாதா கோயில் மணி
நத்தார் தினத்தை நினைவூட்ட, நிராயுதபாணியான ஒரு
ஜேர்மனியப் படை வீரன் இரண்டு கைகளையும் தூக்கியவாறு
உயர்ந்த இடம் நோக்கி ஓடி-அங்கிருந்து பாடிய
பாடல் “சைலன்ட் நைட், ஹோலி நைட்”

இரு தரப்பும் வியப்போடு நோக்க, இரசிக்க, பாடல் முடிய-
திடிரென ஒரு பிரான்ஸ் நாட்டு வீரன் நிராயுதபாணியாய் ஓடி,
அவனைக் கட்டியணைக்க இருதரப்பும்- ஆயுதங்களைக் கைவிட்டு
ஆடிப் பாடி கூடிக்களித்த நத்தார் பொழுது.
அழகிய சமாதானத்தின் இன்ப இரவு

எதையும் விளக்கிச் சொல்லும் அருமை
என் குருவிற்கே உரித்தான பெருமை-

எமக்காய் தள்ளாத வயதிலும் அருட் தந்தை குக்
ஜேர்மன் மொழியில் பாடலைப் பாடிட
என் மனதில் சொல்லொண்ணாப் பேரானந்தம்
தந்தை குக்கோ நினைவை விட்டு நீங்காத ஜீவானந்தம்

ஞாயிறு ஆங்கிலத் திருப்பலியில்
பக்தி சொட்டும் தந்தை மிலரின் அருளுரையில்
அறிவும் ஆன்மீகமும் புத்தியைத் தீட்டும்

பாராட்டிச், சந்தேகம் நீங்கிடக் கலந்துரையாடி
கல்லூரி வாசல் வரை சென்று, கட்டியணைத்து விடை கூறிட
ஆல்போல் தளைத்து, அருகுபோல் வேருண்டிய
நல்லுறவில் ஒளிரும் தந்தை மகனின் பேரழகு

ஞாயிறுத் திருப்பலியில் குருக்கள் உண்ணும்
அப்பத்தின் பாதியை, எப்போதும் எனக்குத் தந்து
தன் அன்பைச் சொல்லி, என்னை மகிழ்வித்த தந்தை

என்னுடைய நண்பன் நீ-உனக்காய் பாதி அப்பத்தை
வைத்திருப்பேன்-வேறு எவருக்கும் கொடுக்கமாட்டேன்
தாயாய் கொடுத்து மகிழ்ந்த நெஞ்சம், மனம் நெகிழ்ந்து-
தந்தையை அணைத்து அன்பைச் சொன்ன சின்ன அஞ்சுகம்

உண்மை என்றால் என்ன? - உரையாடலில்
*"Truth is the exact correspondence with reality"*
*"Truth is the correct equation between the thing*
*and the Thought"* கற்றதை நான் கூறிடப் பாராட்டியவர்
வார்த்தை கடந்த அனுபவமே உண்மை
உண்மை உன் சொந்த அனுபவத்தால்
அறியப்பட வேண்டிய மேன்மை

புதுப்பாதைக்கு ஒளி காட்டிய மேதை
எப்போதும் என் சந்தேகங்களுக்கு ஆர்வத்தோடு
செவிமடுத்து தீர்த்து வைத்த ஞான கீதை

முதுமையில் தள்ளாடி, நடக்க முடியாது ஊன்று கோல்களின்
துணையோடு நடக்கக் கண்டு, உள்ளம் உருகிட-மெல்லச் சிரித்தவர்
தவமாய்த் தனியே அமர்ந்திருந்து, வெட்டுக் கிளி பிடிக்கும்
கொக்குகளையும், பாடிக் களிக்கும் ஜோடி மைனாக்களையும்
சுட்டிக் காட்டி, மாலையில் நான் இரசிக்கும் காட்சி
என் மனதிற்கு இன்பம் தரும் இயற்கையின் மாட்சி

தள்ளாத வயதில் தனிமைத் தவம்
தாங்கிச் அன்பைச் சொல்லக் கிட்டாத வரம்
பிள்ளை என் நெஞ்சைச் சுட்ட சுரம்.

பழம் மெத்தையில் பல்லாண்டு படுத்த மகான்,
புது மெத்தையை நிராகரித்து என்-டி ஷேர்ட்டையும்
மெத்தை விரிப்பையும் காணிக்கையாய் ஏற்று
ஏழை என்னை மகிழ்வித்த பெருமகன்

மாதம் ஒரு முறை-பழங்களோடு என் சந்திப்பு
பாசத்தந்தையோ முக்கனிச் சுவையிலும் தித்திப்பு-கட்டியணைத்து
நெற்றியில் முத்தமிட்டு விடைபெறும் போதெல்லாம்
என் கரங்களை வாஞ்சையோடு இறுகப்பற்றி
தன் அன்பைச் சொல்லும் அழகில் தந்தையின் பூரிப்பு

இறுதி நாட்களில் உணவும், நீரும் வெறுத்து படுக்கையில்
நொந்து கிடந்த தந்தை, பழங்களையாவது உண்ணச்
சொல்லுங்கள்; என்னை வேண்டிய தந்தை லோரியோ
என் தந்தைக்கு அந்தியகாலத்தில் அருந்துணை

எல்லாம் துறந்து நினைவிழந்து
வானகம் நோக்கிய பயணியாய் அவர்
நீர் கசிய நெஞ்சு நொருங்க
தந்தையை பிரியும் மகனாய் இவன்

ஓடி ஆடி உலகை மகிழ்வித்த வெள்ளைப் புறா வாடிடக்கண்டு
மனம் நொந்தழுத பொழுது விரக்தியும், வேதனையும்
ஆட்கொள்ள-கண்ணீரோடு கடவுளை கூவியழைத்த இரவு
இன்றும் கல்வாரியில் ஓர் இறைமகன்
"எல்லாம் முடிந்ததெனச் சொல்லும் மனுமகன்"

நாதியற்ற தந்தைக்குத்-துணையாய் வானதூதரை அனுப்புங்கள்
அப்பா அப்போது உங்களை நம்புவேன்- ஆவேசமாய்
வேதனையில் வார்த்தைகளை கொட்டியவன். 30.12.2018
மறு நாள்-கண் கண்ட அதிசயம்
வாழும் இறைவனுக்குச் மாட்சியான சாட்சியம்

வெள்ளைத் தேவதை அன்னா அம்மையார் படுக்கை விரிப்புக்களை
மாற்றிப் பணி செய்ய, நானும் அவருக்குத் துணை செய்து
இறை தேவதை நீங்கள் நன்றி கூற, நாளும் வந்து
உதவுவேன்-கவலை வேண்டாம் ஆறுதல் மொழிந்த தெய்வத்தாய்.

நோயுற்ற தேகம் நெஞ்சை நோகடிக்க, சேயுற்ற சோகம் பதறித்-
தந்தை உயிர் காக்க , தாயே என்ன செய்யலாம் வினவ-
இறுதிப்பயணத்தில் தந்தை, இதழ்களை ஈரமாய் வைத்திருப்பதே
உகந்த சிகிச்சை-அன்னை மொழிகேட்டு விக்கித்து நின்ற பிள்ளை

சோகக்கடலில் நான் மூழ்கிட-ஏழ்கடலும் என் இதயத்தில்
அலைமோத சுக்கு நூறாய் நொருங்கிட்ட இதயம், தந்தையே-
ஏன் என்னை கை நெகிழ்ந்தீர், இறைவனைக்
கூவி அழைத்த நெஞ்சம், அஸ்தமிக்கும் என் உதயம்






1.1.2019 புத்தாண்டு மலர்ந்திட-அதிகாலையில்
தந்தை மிலரை வாழ்த்தச் சென்ற தந்தை லோரியோ,
"மெல்லச் சென்ற இறுதி மூச்சு-எல்லாம் முடிந்தது
நண்பா வருகிறேன் தந்தையிடம் செல்கிறேன்"
சொல்லிச் சென்ற கடைசி மூச்சு

காற்றோடு கலந்து எம்மில் உலாவும் சுவாச்காற்று
சாட்சியான தந்தை நெஞ்சிலோ மாறாத பெருமூச்சு-
பிள்ளை நெஞ்சிலே இன்றும் ஆறாத ரணம் -ஆளும்
சுதேசக் குருக்களில் நாறும் மாறாத சுயநலம்

Quis Ut Deus- **இறைவனுக்கு நிகர் யார்**?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க. எல்லோரும் நலம் வாழ்க***

Pax Ravichandra-27-09-2023

# வள்ளல்கள்







முதல், இடை, கடை வள்ளலகளின் வாழ்வோ
படித்துச் சுவைக்க வியப்பு, -இருப்பதில் கொடுத்தார்
இல்லாதோர் வாழ, நட்பின் பெருமை சொல்ல
உயிரையும் கொடுத்த கர்ணன் வாழ்வோ சிறப்பு

அன்னை, தந்தை நல்லுறவும், நாடும் துறந்து,
ஏழ்மை, கற்பு, கீழ்படிதலை தவமாய் நூற்ற -வெள்ளைத்
துறவிகள், வள்ளல் நிலையிலும் உயர்ந்த பெருமான்கள்
மாணவருக்காய் வாழ்வையே ஈந்த மாமுனிகள்

வாவி சூழ்ந்த, பூமியில் கல்லூரி அமைத்து கல்விக் கண் திறந்தார்,
வாழ்வே வேள்வியாக, தம்மை ஆகுதியாக்கி ஞான யக்ஞம் யாத்தார்
துறவறத்தால் வாழ்வு சிறக்க, பணி வாழ்வைத் தவமாக்கி, -அழியாக்
கல்விச் செல்வத்தை மாணவருக்கு வரமாக்கி வாழும் தெய்வமானார்

கல்லூரி அமைத்த மாமுனி வண பிதா போனல் இன்றும்
பிறர் வாழ வாழுங்கள் என கல்லூரி வாயிலில் தவமிருக்க்-அழியும்
பொன், பொருள் ஈந்த வள்ளல்களிலும் பெருவள்ளல்களாய் இவர்கள்
வெள்ளைத் தமிழனாய், தமிழனுக்காய் உயிரீந்த ஹேபர்ட் அடிகள்



வறுமைப் பிணி போக்கிட-பொன்னும், பொருளும்
வாரி வழங்கிய வள்ளல்கள் காலம் மலையேறிட,
அறிவுப்பசி போக்க, வாழ்வை அர்ப்பணித்த வள்ளல்கள்
வாழும் காலம் என்றும் நிலைக்க வானுயர்ந்த கல்லூரி



மாணவர் நாம் கல்வியால் வாழ்வில் உயர
ஏணிகளாய் தம்மை அர்பணித்த
வெள்ளைத் துறவிகளின் தியாக பூமி
புனித மிக்கேல் கல்லூரி

வாழ்வும் தவமாக, வழியும் உண்மையின் ஒளியாக
அன்பே சிவமாக வாழ்ந்து, தம்மை எமக்காய் தந்து
அழியாக் கல்விச் செல்வத்தை அள்ளிக் கொடுத்தவர்போல்
வள்ளல்களும் உண்டோ-சொல்லுங்கள் பெரியார்களே?

இது தேகம் பூண்ட துறவல்ல, மனித நேயம்
பூண்ட அன்புறவு , இது காவியகாலத்து
கதையல்ல காலத்தால் அழியாத வரலாறு



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-27-09-2023

# ஆசான்கள்

---

*"Sons of blessed St. Michael's*
*our flag is flying high"*

சிவப்பு- நீல வண்ணக் கொடி வானில் ஆடிப்பறக்க
புனித மிக்கேல் கல்லூரியின் மாணவர் நாம்
கல்லூரி கீதத்தை ஆனந்தமாய் பாடித் துதிக்க
ஆரம்பமாகும் கல்லூரி நாள் விழா

நினைவு தெரிந்து -என் அறிவு கண்ணை
திறந்து வைத்த முதல் ஆசானாய் என் அன்புத்தாய்

இரண்டாம் வகுப்பில் அடித்து, அச்சுறுத்தி அழவைத்து-பின்
அரவணைத்த டெப்னி டீச்சர்., சிறுவர் எம்மைக் கட்டியணைத்து
பாடம் சொல்லிய திரேஸ் ஜோன் , அன்போடு
ஆங்கிலம் கற்பித்த திருமதி சோமநாதர்



அருட் தந்தை வெபர் அடிகள் வழிநடத்திய
"Knight of the Blessed Sacrament" (KBS)
நற்கருணை வீரன் உறுப்பினராகி
மாதாவிடம் மகிழ்வோடு செபித்து
மகன் இயேசுவை துதித்து-ஆராவாரித்து
பாசிக்குடா சென்ற சுற்றுலாப்பயணங்கள்
நெஞ்சின் பசுமை நிறைந்த நினைவுகள்.

கதைகளால் பலவற்றை கற்றுத்தந்து
சாரண விழுமியத்தின் சான்றாய்
வாழ்ந்த சவரிராஜா மாஸ்டர்.

கோட்டை முனைப்பாலத்தில்
அன்னையோடு வந்த என்னை அரவணைத்து
இனி உன் பெயர் "*Pax*" என்றே
பெயரிட்டு என அழைத்த பெரியார்.

அன்போடு கற்பித்த இராசையா மாஸ்டர், ஆங்கிலத்தை
கண்டிப்போடும், பிரம்போடும் கற்றுத்தந்த றாகல் மாஸ்டர்
சித்திரமும், சுகாதாரமும் ஓதி , ஒழுக்கத்தை பேணிட ஊக்குவித்து
கிறிக்கட், உதைப்பந்தாட்டம் பயிற்றுவித்த அன்றியாஸ் மாஸ்டர்.

காலைச் செபத்தோடு பாடம் தொடங்கும்
திருமதி வன்னித்தம்பி டீச்சர்.
அழகோவியமாய் அன்போடு
இன்பத் தமிழை ஓதுவித்த கமலா டீச்சர்

ஆங்கில அரிச்சுவடியை அவர்போல் அழகுற எழுதிட
ஊக்குவித்து-என் கையெழுத்தை அழகாய் மாற்றிய
அருட் தந்தை பீரிஸ் அடிகள்.

தமிழ் இலக்கணத்தை கசடறக் கற்பித்த
குமார் மாஸ்டர், சமயத்தை மனம் ஈர்த்திடக் கற்பித்த
அருட் தந்தை போல் சற்குணநாயகம்

தமிழும், சங்கப்பாடல்களும்
மனம் கவர அன்போடு கற்பித்த
வித்துவான் கமலநாதன்

கணிதம் எல்லாம் கவிதையாய் சொல்லி
ஆர்வம் வளர்த்த கொன்ஸாக மாஸ்டர்
குடியியலும், சரித்திரத்திற்கும் நூறு புள்ளி வழங்கி
அஞ்சாமையை ஊக்குவித்த L.M. ஜோசப் மாஸ்டர்.

உயிரியலுக்கு உயிர் ஊட்டிய குணம் மாஸ்டர்
பௌதிகத்தை பாசமாய் ஊட்டிய
பத்மநாதன் மாஸ்டர்.

கேள்வி கேட்கும் ஆர்வத்தைத் தூண்டி
அறிவை வளர்த்து இரசாயனவியலை, இரசித்துப்
படிக்கத் தூண்டிய மார்க்கண்டேயர் மாஸ்டர்.

மையெழுதிய விழிகளின் அழகு ஜொலிக்க, கடமையுணர்வோடு
பாடம் நடத்தி பௌதிகவியலை காதலிக்க வைத்த
அன்பும் அழகும் நிறைந்த ஆசிரியை
பண்பான சேனாதிராஜா

ஆங்கிலம் கற்பித்த திருமதி அஷ்லி டீச்சர்
புள்ளிகளால் குறிப்பு வழங்கி இரசாயனவியலை
நட்போடு கற்பித்த கனகரெட்டனம் மாஸ்டர்.

The Highway Man-ஆங்கிலக்கவிதைக்கு
உயிர் கொடுத்து, ஆங்கில பாடத்தை நேசிக்க
வைத்த கந்தையா டீச்சர்.

வெள்ளை வேட்டி, வாலாமணியோடு
தமிழ் மகனாய் உலா வந்த புவியியல் ரெட்னையா,
செல்வநாயகம் மாஸ்டர்கள், சிங்களத்தை
சிரத்தையோடு ஓதுவித்த மாஸ்டர் குலதுங்கா.

அழகிய தேவதையாய் விலங்கியலை ஓதுவித்த
அன்னை உமா, எப்போதும் நேசத்துடன் அரவணைக்கும்
இரசாயனவியல் சுமித்ரா செல்லையா

என்ன கிளி என்றே அன்போடு அழைக்கும்
பௌதிகவியல் அரியரெத்தினம் மாஸ்டர்

தாவரவியலை தளிர்க்கச் செய்து
"உயிர்" பத்திரிகை நடத்தியகுணம் மாஸ்டர்
இரசாயனவியலுக்கு இரக்கணமாய்
நவரெத்தினம் டீச்சர்

கல்லூரிப் பொன் விழாவைச் சிறப்பிக்க
நாம் நடத்திய கண்கவர் கண்காட்சி
வாழ்நாளில் மறக்கமுடியாத நற்காட்சி

கூடைப் பந்தாட்டத்திற்கு உயிர் கொடுத்த
அருட் தந்தையர், வெபர், யூஜின் ஹேபியார் அடிகள்
பின்னாளில் தமிழனுக்காய் தன்னுயிர் நீத்து
மறைந்த யூஜின் ஹேபியார் அடிகள்

கைப்பிரம்போடு கல்லூரியின் ஒழுக்கம் பேணிய
அருட் தந்தை பெஸில்-மோத்தா அடிகள்
இறை பக்தியில் நாளும் வளர. எந்நாளும் என்னை
தன் குழந்தை என போற்றிய தந்தை வெபர் அடிகள்

பூட்றி, பொனல், மரியான், கெஸ்டன்
சிவப்பு. நீலம், பச்சை, மஞ்சள்
நான்கு வண்ணங்களாய் பிரிந்து நடத்திடும்
வருடாந்த விளையாட்டுப் போட்டி
வாழ்வில் மறக்கமுடியாத ஆனந்தக் காட்சி

பல மாகாணக் கல்லூரிகள் பங்கேற்க, ஊரும்,
கல்லூரியும் களைகட்ட திருவிழாவாய் மூன்று நாட்கள்
நடந்தேறும்-கூடைப்பந்தாட்டப் பெருவிழா

வெள்ளிதோறும் கல்லூாரியில் பார்த்து மகிழும்
திரைப்படம், ஒன்ஸ்மோர் எனக் கத்தி
ஆர்ப்பரிக்கும் ஆனந்தச் சுதந்திரம்.

மத்திய கல்லூாரியோடு -எம் கல்லூாரி நடத்திடும்
மாபெரும் கிறிக்கற் போட்டி
“What’s the colour, Red and Blue”
பண்டாட்ட ஜீன்டா-ஜீன்டாட்ட பண்டா’’
கோஷமெழுப்பி ஆர்ப்பரித்து-வெற்றியை கொண்டாட
வெடிகள் நிறைத்த சவப்பெட்டியை ஊர்வலமாய் சுமந்து-
மைதானத்தில் தீயிட்டு கொளுத்திட
வெடியோசை ஊருக்கு வெற்றிச் சேதி சொல்லிட
எங்கும் ஒரே கொண்டாட்டம்.

உதைப்பந்தாட்டப் போட்டிகள் ஊரே திரண்டு பார்க்க-
வெற்றியில் உள்ளம் ஆனந்த கூத்தாட
ஒரே கொண்டாட்டமான திருநாள்

கல்லூாாரி விடுமுறை நாட்களில் காலை முதல் மாலை வரை
களிப்போடு விளையாட-வளாகத்தில்
பல்வகை விளையாட்டுக்கள்.

பரிசளிப்பு விழா-முத்தமிழும், ஆங்கிலமும் கலந்த
கொண்டாட்டம், கலைக்களஞ்சியமான நூல் நிலையத்தில்
ஆர்வத்தை துாண்டிட-ஆங்கிலம், தமிழ், புராண-
இலக்கியங்களின் ஆர்ப்பாட்டம்.

காலை, மாலை, மதியம், இடைவேளை
எல்லாம் செபிக்க கற்றுத்தந்த பள்ளி
எல்லோரும் இயேசுவின் சகோதரர் என
சொல்லித்தந்த கல்லூாரி

மீன்பாடும் தேனாட்டில்-இதுபோல் ஏதுமில்லை
எண்ணிட துடிக்கும் இதயம்
இறந்த காலத்தை மீட்டிப் பார்க்கும் இனிய பருவம்.

அன்னையாய் அன்போடு அரவணைத்து
கல்வியிலும். ஒழுக்கத்திலும் வானுயர எம்மை ஏற்றுவித்து-
இருந்த இடத்தில் நின்ற ஏணிகளாய் வாழ்வை இறைவனுக்காய்
அர்ப்பணித்த பல நூறு அருட் தந்தையர்-
நாம் அறிய மிலர், நீ, குக், டெல் மா மோ, கூளி, ஹெலி
என எண்ணற்ற திருத்தந்தையர்.

பார் வியக்க-அருட் தந்தை பொனல் எழுப்பிய
அறிவாலயம்-இன்றும் மீன்பாடும் தேனாட்டில்
கல்வி, ஒழுக்கம், கூடைப்பந்தாட்டம்
என்பவற்றிற்கு சாட்சியமாய் மாறிட்ட பேராலயம்.

பிறந்த பொன்னாடு துறந்து-எம் நாடு வந்து
இருளில் ஒளியேற்றிய தீபங்கள்
தம்மையே எமக்காய் மெழுகுதிரியாய்
எரித்திட்ட தெய்வங்கள்.

என் வாழ்வை உய்வித்த அருட் தந்தையரையும்,
ஆசான்களும்.-நினைத்துப்பார்க்கையில் நெஞ்சம் கனிந்து,
நன்றி பெருக்கெடுக்க, எல்லாம் வல்லவனை மனம் துதிக்க
என்னே அழகிய நாட்கள்.

பள்ளி வாழ்க்கைபோல் ஒன்றில்லை
பழகி களிக்க நண்பரைப்போல்
உயர்ந்த உறவில்லை –

பாடம், படிப்பு. ஆட்டம் பாட்டம், விளையாட்டு
என வாழ்ந்த காலங்கள் வசந்தங்களாக, இதயம்
துள்ளிக் குதிக்க. இளமை புதுப்புனலாய் பெருக்கெடுக்க
இன்றும் பசுமையான நினைவுகள், பாசமிக்க உறவுகள்.

திரும்பி வராத நாட்களை திருப்பிப் பாாக்கையில்-
இதயம் துடிக்கின்றது. இன்பம் ஊற்றெடுக்கின்றது-விழிகளில்
ஆனந்தக் கண்ணீர் துமிக்கின்றது.

எல்லாம் நின் கருணை என இதயம் நன்றி சொல்கின்றது.
எல்லாப் புகழும் இறைவனுக்கே என மனம் துதிக்கின்றது.

QUIS UT DEUS
( இறைவன் யார்?, இறைவனுக்கு நிகர் யார்? )
***மனம் வினவுகின்றது.***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-23-5-2023